# அன்புடன்...

**’தை** பிறந்தால் வழி பிறக்கும்’ என்பார்கள். வேதங்களிலும், புராண இதிகாசங்களிலும் தை மாதம் சிறப்பான மாதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய உள்ள காலம் சூரியன் வடதிசையில் பயணிப்பார். இந்தக் காலத்தை உத்தராயண காலம் என்பார்கள். இந்தக் காலம் ஞானத்தை வழங்கும் காலமாகச் சொல்லப்படுகிறது. இந்தக் காலத்தில் உடலைத் துறப்பவர்களுக்கு மறுபிறவி கிடையாது என்பது நம்பிக்கை. மகான் வள்ளலாரும் உத்தராயண காலத்தில்தான் தன் உடலைத் துறந்து ஜோதியில் ஐக்கியமானார்.

மிகவும் விசேஷமான இந்த மாதத்தின் முதல் நாள் உழவர்கள் தங்கள் வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்கும் சூரியனை வழிபடும் நாள். உழவர்கள் மட்டுமில்லாமல், தமிழர்கள் அனைவருக்குமே ஒரு திருநாள்தான் பொங்கல் திருநாள்.

தை மாதத்தில் சூரியனை பிரதானமாகக் கொண்டு பொங்கல், ரதசப்தமி, பீஷ்மாஷ்டமி போன்ற விசேஷங்கள் கொண்டாடப்படுகின்றன.

இந்த இதழில் சூரியனையும் பொங்கலையும் மையப்படுத்தி கவிதை, கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன.

இந்த மாதத்தில்தான் ஞாலம் முழுவதும் ஞானஒளி பரப்பிய ஞானபானு சுவாமி விவேகானந்தர் அவதரித்தார். அவரைப் பற்றிய கட்டுரை, கீழடி அகழ்வாய்வில் கிடைத்த காசுகள் பற்றி நாசா கணேசன் எழுதிய கட்டுரை போன்றவற்றுடன், பொங்கலுக்கு முந்தைய தினம் வைகுண்ட ஏகாதசி வருவதை முன்னிட்டு ஒரு கட்டுரை ஆகியவை இடம்பெற்றிருக்கின்றன.

இந்த இதழுடன் உங்கள் ஓம்சக்தி மாத இதழ் முப்பத்திஒன்பது வருடங்களை நிறைவு செய்து, அடுத்த மாதம் தன்னுடைய நாற்பதாவது ஆண்டில் அடியெடுத்து வைக்க இருக்கிறது. ஓம்சக்தி இதழின் தொய்வற்ற பயணத்துக்கு உற்ற துணையாக இருக்கும் வாசகர்கள், ஏஜெண்டுகள், விளம்பரதாரர்கள் அனைவருக்கும் ஓம்சக்தியின் இனிய பொங்கல் திருநாள் நல்வாழ்த்துகள்.



–பொறுப்பாசிரியர்

**ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்!**
**காவிரி நாடன் திகிரிபோல், பொன் கோட்டு**
**மேரு வலம் திரிதலான்...**

**-சிலப்பதிகாரம்**

● சூரியக் கடவுள் 'கொடிநிலை' என்ற பெயரால் அழைக்கப்பட்டதாக தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது.

● உலகில் எழுந்த பழைமையான நூலான ரிக் வேதத்தில் சூரிய வழிபாடு குறிக்கப்பட்டிருக்கிறது.

● ரிக்வேதம் சூரியனை மூன்றுவித அக்னியில் ஒன்றாகவும், யஜுர்வேதம் சகல உலகங்களையும் ஒளிபெறச் செய்பவன் என்றும், அதர்வண வேதம் சூரியனை வழிபட்டவர்கள் இதயநோயிலிருந்து விடுபடுவர் என்றும் கூறுகிறது.

● சூரியன் காலையில் ரிக் வேத சொரூபியாகவும் மதியத்தில் யஜுர் வேத சொரூபியாகவும் மாலை வேளையில் சாம வேத சொரூபியாகவும் திகழ்கிறான்.

● சூரியன், ஒவ்வொரு பருவ காலத்திலும் ஒவ்வொரு நிறத்தில் காட்சி தருகிறார். வசந்த காலத்தில் தங்க நிறத்திலும், வெயில் காலத்தில் செண்பகப்பூ நிறத்திலும், மழைக்காலத்தில் வெண்மை நிறத்திலும், கார்காலத்தில் கருமை நிறத்திலும், முன்பனிக் காலத்தில் தாமரை நிறத்திலும், பின்பனிக் காலத்தில் சிவப்பு நிறத்திலும் விளங்குவதாக வேதங்கள் கூறுகின்றன.

● சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய 'காலம்' என்ற ஒற்றைச் சக்கர தேரில் பவனி வருபவராக புராணங்கள் கூறுகின்றன. இந்த ரதத்தை ரதசப்தமியன்று விஷ்ணு சூரியனுக்கு அளித்தார். ரத சாரதியாக காசியப முனிவரின் மகனான அருணன் விளங்குகிறார்.

● சூரியனின் தேர் தெற்கில் பயணிக்கும் காலத்தை தட்சிணாயனம் என்றும், வடக்கு நோக்கி பயணிக்கும் காலத்தை உத்ராயணம் என்றும் கூறுவர்.



● ஸ்ரீ ராமபிரான் உலகின் நலனைக் கருதி ராவணனை வெல்ல முனைந்தபோது அவருக்கு பாதுகாப்புக்கவசமாக ஆதித்ய ஹ்ருதயத்தை அகத்தியர் உபதேசித்தார்.

● இந்தியாவில் சூரியனுக்கென்று தனியே ஒருசில ஆலயங்களே உள்ளன. இவற்றுள் மிக முக்கியமானவை, ஒரிசா கோனார்க், கயா தட்சிணார்க்கா, ஆந்திரா அரசவல்லி, குஜராத் மொதேரா, அஸ்ஸாமில் சூர்யபஹார், கேரளாவில் ஆதித்யபுரம், காஷ்மீர் ஸ்ரீநகரில் 2000 ஆண்டுகள் பழைமையான மார்த்தாண்டா ஆலயம் ஆகியவையாகும்.

● கி.மு.2000-க்கு முன்பே சூரிய வழிபாடு இருந்து வந்திருக்கிறது. உபநிஷத்துக்களும் புராண இதிகாசங்களும் சூரியனின் புகழைப் பேசுகின்றன.

● சூரிய ஒளியில் நிறப்பிரிகை ஏற்பட்டால் ஏழு வண்ணமாகப் பிரிகிறது. ஏழு வண்ண ஒளியின் சேர்க்கையே சூரிய ஒளி. சூரியனுக்கு ஏழு குதிரைகள் என்று வேதம் வர்ணிப்பதன் சூட்சுமம் இதுவே. குதிரையை அசுவம் என்பர். அசுவம் என்ற சொல்லுக்கு வர்ணம் என்றும் பொருளுண்டு.

● சூரியன் சித்திரை முதலான பன்னிரண்டு மாதங்களிலும் மித்ரன், ரவி, சூரியன், பானு, ககன், பூஷணன், ஹிரண்யகர்ப்பன், மரீசி, ஆதித்யன், ஸவிதா, அர்க்கன், பாஸ்கரன் என போற்றப்படுகிறார். ●

# அகிலம் முழுவதும் பரவிய ஞான ஒளி



**ஜனவரி - 12**
சுவாமி விவேகானந்தர்
பிறந்த தினம்

தேனினும் இனிய குரலில் இரண்டு வங்காளி கீதங்களை அற்புதமாகப் பாடினான் அந்த இளைஞன். அதைக் கேட்டவுடனேயே அந்தத் தவமுனிவர் தன்னை மறந்து சமாதி நிலைக்குப் போய்விட்டார். கண்களிலிருந்து நீர் பெருகிற்று. முகம் அபூர்வமானதோர் ஆனந்தத்தில் திளைத்தது.

பாடி முடித்ததும் அந்த இளைஞனை அன்புடன் அணைத்துக் கொண்டு, "அப்பனே! இப்படி ஓர் ஆத்மாவைச் சந்திக்க வேண்டுமென்றுதானே இத்தனை நாள்களாகக் காத்துக் கொண்டிருந்தேன்? என்னுடைய ஆன்மிக உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ள இங்கே நீ அடிக்கடி வருவாயா?" என்று கேட்டார். அந்த இளைஞனுக்கு அது விளங்க வில்லை. அவருடைய பார்வையும் பரிவும் அவனுக்கு விநோதமாகத் தெரிந்தன. அங்கே மறுபடி வருவதற்குக்கூட அவன் தயங்கினான். ஆனால், அவனால் அவர் மிகச் சிறந்த மகான் என்பதையும் உணர முடிந்தது. அவர் மூலம்தான் கடவுளைக் காணவும் இயலும் என்று அவன் நம்பினான். நெஞ்சில் இந்த உணர்வைச் சுமந்துகொண்டு புது மனிதனாக வீடு திரும்பினான் அந்த இளைஞன்.

நரேந்திரன் என்ற அந்த இளைஞனே பின்னால் விவேகானந்தர் என்ற பெயரில் உலகப் புகழ் பெற்ற மகான். அவன் சந்தித்த அந்தப் பெரியவரே பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

கல்கத்தாவில் விஸ்வநாத் தத்தா என்ற புகழ்பெற்ற வக்கீல், பல மொழிகளிலும் புலமை பெற்று, சமூகத்தில் எல்லோராலும் மதிக்கப்படுபவராக விளங்கி வந்தார். அவருடைய மனைவி புவனேஸ்வரிதேவி ஆன்மிகப் பற்று மிகுந்தவள். குழந்தையை பக்தி உணர்வு நிறைந்தவனாக வளர்க்க அரும்பாடுபட்டாள். ஓயாமல் விஷமம் செய்யும் சிறுவனை வளர்க்க அன்னை மிகவும் சிரமப்பட்டாள். 'ஒரு குணசாலி யான மகன் வேண்டும் என்று சிவபெருமானை வேண்டினேன். அவர் சிவகணங்களில் ஒருவரை

எனக்கு அனுப்பி வைத்து விட்டாரே!' என்று அவள் விளையாட்டாகக் கூறிச் சலித்துக் கொள்வது வழக்கம். அந்த நாளில் பிரம்மசமாஜம் என்ற இந்துமதச் சீர்திருத்த இயக்கம் வங்காளத்தில் ஓரளவு புகழ் மிகுந்து பரவி இருந்தது. நரேந்திரன் அதில் ஈடுபாடு கொண்டான். அவர்களுடைய கூட்டங்களில் கலந்துகொள்வான். ஒரு முறை அப்படிப் போனபோது அதன் தலைவரான மகரிஷி தேவேந்திரநாத் தாகூரிடம், "சுவாமி! நீங்கள் கடவுளை நேரில் கண்டிருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

அந்தக் கேள்வியைக் கேட்டுத் தாகூர் திகைத்துப் போனார். அவரால் அதற்குச் சரியான பதில் கூற முடியவில்லை. நரேந்திரனின் மனம் சமாதானம் அடைய வில்லை. தொடர்ந்து பலரிடம் கேட்டும் சரியான பதில் கிடைக்கவில்லை. அப்போது அவனுடைய ஆர்வத்தை உணர்ந்த கல்லூரி முதல்வர் ஹேஸ்டீ என்பவர், "இங்கே அருகில் தக்ஷிணேஸ்வர் என்ற இடம் இருக்கிறது. அங்கே ராமகிருஷ்ணர் என்ற பெயரில் ஒரு மகான் இருக்கிறார். நீ அவரை நாடினால் ஒருவேளை உனக்கு உரிய வழியை அவர் காட்டக்கூடும்!" என்று சொன்னார்.

அதைக் கேட்ட நரேந்திரன் மிகுந்த ஆவலுடன் நண்பர்களை அழைத்துக்கொண்டு தக்ஷிணேஸ்வரத்துக்குச் சென்றான். அங்கேதான் அவனுக்கு முன் சொன்ன அபூர்வமான அனுபவம் ஏற்பட்டது...

ஒரு மாதத்துக்குப் பின் நரேந்திரன் மீண்டும் அங்கே சென்றான். ராமகிருஷ்ணர் அவனை மிகுந்த அன்புடன் வரவேற்று கனிவுடன் பேசினார். ராமகிருஷ்ணர் அவனுடன் பேசும்போது ஒருமுறை, ''எல்லோருமே கடவுளை உணரலாம். கடவுளை நேரில் பார்த்துப் பேசவும் முடியும். ஆனால் யாருக்கும் அந்தச் சிரத்தை இல்லையே?'' என்று சொன்னார். அந்தப் பேச்சு அவனுடைய உள்ளத்தில் ஆழப் பதிந்துவிட்டது. அவர் தனக்கு வழிகாட்ட முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற் பட்டுவிட்டது.

நரேந்திரனுக்குப் பரப்பிரும்மத்தை உணரும் முழுமையான ஆன்மிக மனமலர்ச்சி கிடைக்க வேண்டும் என்று ராமகிருஷ்ணர் விரும்பினார். அதன்படியே நரேந்திரன் ஒருநாள் நந்தவனத்தில் அமர்ந்து பிரார்த்தனை செய்துகொண்டிருந்தபோது பேரானந்த நிலையை எட்டினான்; பரப்பிரும்ம சொரூபத்தைக் கண்டு உணர்ந்தான்; நிர்விகல்ப சமாதியில் உறைந்து போனான்.

ஆனால், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தனக்குப் பிறகு நரேந்திரன் தனது தொண்டுகளைத் தொடர்ந்து செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினார். ஆகையால் தனது முக்திக்கு நான்கு நாள்களுக்கு முன்பு நரேந்திரனை அழைத்து, சிரமேற் தொட்டு ஆசீர்வதித்து, அவனுக்குத் தீட்சை அளித்து, தனக்குப் பின் தலைமை ஏற்று நடத்தும் பொறுப்பையும் கொடுத்துவிட்டார்.

ராமகிருஷ்ணரின் மறைவுக்குப் பிறகு இரண்டு ஆண்டுகள் நரேந்திரர் கல்கத்தாவிலேயே இருந்து சந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டு, இளம் சந்நியாசிகளையும் தொண்டில் ஈடுபடுத்தி வந்தார். ஆனால், நாடு முழுவதும் பிரயாணம் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் அவரை உத்திக் கொண்டே இருந்தது. அதனால் கல்கத்தாவை விட்டுப் புறப்பட்டுச் சென்று வாரணாசி, அயோத்தியா, பிருந்தாவன், ஹித்ரான் போன்ற பல புண்ணியத்தலங்களுக்கும் இமாலயப் பகுதிகளுக்கும் விஜயம் செய்தார்.

மூன்று ஆண்டுகளில் அவர் பாரதம் முழுவதையும் சுற்றிப் பார்த்துவிட்டார். மக்களிடம் அவர் கண்ட ஜாதிமத இனவேற்றுமை அவரை மிகுந்த வேதனைக்கு உள்ளாக்கிற்று. ஏழை எளிய மக்களிடம் அவர் அளவு கடந்த அன்பு கொண்டார். இளைஞர்களிடம் உத்வேகமும், பரந்த மனப் பான்மையும், சமயப் பற்று மிகுந்த மன எழுச்சியும் உண்டாக வேண்டும் என்று அவர் விரும்பினார்.

மக்களிடம் அவர் கண்ட ஜாதிமத இனவேற்றுமை அவரை மிகுந்த வேதனைக்கு உள்ளாக்கிற்று. ஏழை எளிய மக்களிடம் அவர் அளவு கடந்த அன்பு கொண்டார்.

இந்து மதத்தின் பெருமையை அனைவரும் அறிய, அமெரிக்காவுக்குச் சென்று உரை நிகழ்த்தி உபதேசிப்பதே சரியானது என்ற முடிவுக்கு வந்தார் அவர். மேலும் நமது மதத்தைச் சரியானபடி

இளையதலைமுறையினரும் புரிந்து கொள்வதே நமது எதிர்காலம் மேம்பாடு அடைய உதவும் என்று எண்ணினார். அதனால் இந்தியாவின் தென்கோடியான கன்னியாகுமரி வரையில் பிரயாணம் செய்து, பின்னர் சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

சென்னையில் அவருக்கு அமோகமான வரவேற்பு கிடைத்தது. ஏராளமான மக்கள் அவர்மீது அளவிலாத பக்திகொண்டு, அவரைப் பின்பற்றினார்கள். அமெரிக்காவில் நடைபெறவிருந்த சர்வமத மாநாட்டில் கலந்துகொள்ள அவர் போகவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்காக நிதியும் திரட்டினார்கள். சுவாமியும் அமெரிக்காவுக்குச் செல்ல முடிவு செய்தார்.

அமெரிக்காவுக்குச் செல்லுமுன் தனது சீடரான கேத்ரி மகாராஜாவின் அழைப்பின் பேரில் அங்கே சென்றார். அவர்தாம் சுவாமியை விவேகானந்தர் என்ற பெயரை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டி னார். அதை ஏற்றுக்கொண்டு 1893-ம் ஆண்டு, மே மாதம் 31-ம் தேதி, விவேகானந்தர் அமெரிக்காவுக்குப் பயணமானார்...

அங்கே சிகாகோவில் உலகின் பல பகுதிகளிலிருந்தும் சமயப் பிரதிநிதிகள் வந்து கூடி இருந்தார்கள். அவர்களில் பலருக்கும் பொருள் வசதியும் அளிக்கப்பட்டிருந்தது. ஆனால், இந்த இரண்டும் இல்லாமல் அங்கே போய்ச் சேர்ந்த விவேகானந்தரோ பெரும் ஏமாற்றத்துக்கு ஆளாக வேண்டி நேர்ந்தது. மேலும், மாநாடு தொடங்க சில நாள்கள் ஆகும் என்றும், ஆனால் அதில் கலந்து கொள்ளப் பதிவு செய்துகொள்ள வேண்டிய காலவரை கடந்து போய்விட்டது என்பதும் அவருக்குத் தெரியவந்தது. அதிர்ச்சிக்கு ஆளானாலும், மன உறுதியைத் தளர விடாமல் விவேகானந்தர், செலவு அதிகமாக ஆகக்கூடிய சிகாகோவில் தங்க விரும்பாமல், பாஸ்டன் என்ற நகரத்துக்கு வந்து சேர்ந்தார்.

அங்கே பண வசதி மிகுந்த ஓர் அமெரிக்க மாது அவரிடம் அன்பு கொண்டார். அவர் தங்குவதற்கு வசதி செய்து கொடுத்ததுடன், ஹார்வார்ட் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றிய ரைட் என்பவரிடமும் அறிமுகம் செய்துவைத்தார். விவேகானந்தரிடம் பேசிய அந்தப் பேராசிரியர் அவருடைய பேரறிவையும் ஆற்றலையும் வெகுவாகப் பாராட்டினார். அவரே முன்னின்று முயன்று சிகாகோ மாநாட்டில் விவேகானந்தர் பங்குபெற ஏற்பாடு செய்ததுடன், அவருக்கு டிக்கெட்டும் வாங்கிக் கொடுத்து அனுப்பி வைத்தார். அமைப்புக் குழுவினருக்கு ஓர் அறிமுகக் கடிதத்தையும் கொடுத்தனுப்பினார்.

விவேகானந்தர் அந்தக் கடிதத்தையும் விலாசத்தையும் தொலைத்துவிட்டார். அவருக்கு எங்கே செல்வது என்றும் புரியவில்லை. ரயில்வே ஸ்டேஷனிலும், அருகில் சாலை ஓரத்திலும் அமர்ந்து யோசித்துக் கொண்டிருந்த அவரை மிஸஸ் ஜார்ஜ் ஹேல் என்ற பெண்மணி கவனித்தார். அவருடைய கம்பீரமும் அறிவொளி ததும்பும் முகமும் அவரைப் பிரமிக்க வைத்தன. விவேகானந்தரை அவரே மாநாட்டின் பிரதிநிதிகள் தங்கியுள்ள இடத்துக்கு அழைத்துச் சென்று அறிமுகப்படுத்திச் சேர்த்து வைத்தார்.

செப்டம்பர் மாதம் பதினோராம் தேதி சமய அமைப்புகளின் மாநாடு (Parliament of religions) சிகாகோவில் கொலம்பஸ் ஹாலில் தொடங்கிற்று. மேற்கத்திய நாடுகளின் கிறிஸ்துவ அமைப்புகளின் தலைவர்கள், பிரம்மசமாஜத்தின் தலைவர், பௌத்த மதத் தலைவர்கள், தியோசபிகல் சபையின் பிரதிநிதி அன்னிபெசன்ட் போன்ற பெரியோர் பலரும் அங்கே கூடி இருந்தனர். முப்பது வயதே நிறைந்த இளைஞரான விவேகானந்தர் அவர்களிடையே ஒளிததும்பும் ஞான சூரியனாக அமர்ந்திருந்தார். அவருடைய கம்பீரமும், காவி உடையின் தனித் தோற்றமும் அனைவரையும் கவர்ந்தன.

பிற்பகலில் முடிவு நேரம். சுவாமி விவேகானந்தர் பேச எழுந்ததும், அனைவரும் அவரை நோக்கி ஆவலோடு திரும்பினார்கள். கம்பீரமான குரலில் அவர் "அமெரிக்காவில் உள்ள எனது சகோதரி

"அமெரிக்காவில் உள்ள எனது சகோதரி சகோதரர்களே" என்று தொடங்கியதும், பலமான கைதட்டல் எழுந்தது. இரண்டு நிமிடங்கள் அந்த ஒலி அடங்காமல் அலை அலையாக எழுந்தது.

சகோதரர்களே" என்று தொடங்கியதும், பலமான கைதட்டல் எழுந்தது. இரண்டு நிமிடங்கள் அந்த ஒலி அடங்காமல் அலை அலையாக எழுந்தது. அனைவரையும் சகோதரத்துவ உணர்வுடன் பார்க்கும் அவருடைய கண்ணோட்டம் எல்லோரையும் கவர்ந்தது. உலகின் மிகத் தொன்மையான மதத்தின் பெருமையை, மிக இளமையான சந்நியாசி ஒருவர் எடுத்துச் சொல்லுவதைக் கேட்க, அனைவரும் அதிசயமான பார்வையுடன் காத்திருந்தார்கள்.

"வெவ்வேறு இடங்களில் உற்பத்தியாகி, வெவ்வேறு வழிகளில் ஓடிவரும் நதிகள் ஒரே கடலில் வந்து சங்கமம் ஆகின்றன. அதுபோல வெவ்வேறு வழிகளில், வெவ்வேறு உணர்வுகளுடன் மனிதர்கள் வழிபட்டாலும் இறுதியில் உன்னையே வந்து அடைகிறார்கள் - ஓ இறைவனே உன்னையே நாடி யார் வந்தாலும், எந்த உருவில் உன்னைப் பூசித்தாலும், இறுதியில் அவர்களை நீ ஏற்றுக் கொள்கிறாய்!" என்று தொடங்கி சுவாமி விவேகானந்தர் அற்புதமான உரையை நிகழ்த்தினார். மதங்கள் யாவும் உலகளாவிய பரந்த மனப்பான்மையை மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினார். வேதாந்தக் கருத்துகளின் அடிப்படை உண்மைகள் உலகத்தை உய்விக்க உகந்தவை என்பதை எடுத்துக் காட்டினார். ஒற்றுமை உணர்வு ஓங்கவும், நல்ல பண்புகள் இணைந்து இயங்கவும், ஒருமைப்பாட்டுடன் சேர்ந்த மன எழுச்சி வளரவும் அனைவரும் பாடுபட வேண்டினார்.

அமெரிக்கா முழுவதும் இதைத் தொடர்ந்து அவருடைய பெருமை ஓங்கிற்று, பத்திரிகைகள் அவரைப் பாராட்டி எழுதின. நியூயார்க் ஹெரால்ட் நாளிதழ் அவரை 'மாநாட்டின் மிகச் சிறந்த பிரமுகர்' என்றும் 'ஒரு மிகச் சிறந்த நாட்டின் பெருமையைப் பரப்ப வந்த ஆற்றல் மிகுந்த தூதர்' என்றும் வருணித்தது.

இவ்வளவுக்கும் நடுவே சுவாமியின் உள்ளம் மட்டும் இந்தியாவின் எளிய மக்களுக்காக ஏங்கிக் கொண்டிருந்தது. இந்தியாவின் இளைய தலைமுறையினர்

எழுச்சி மிகுந்து, ஒற்றுமை உணர்வுடன் நாட்டின் மேன்மையை உலகறியச் செய்ய வேண்டும் என்ற ஒரு புத்துணர்வைத் தூண்ட அவருடைய மனம் துடித்தது. அமெரிக்காவில் இந்தியாவைப் பற்றிய நல்ல அபிப்பிராயத்தை உருவாக்க, நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து விரிவுரைகள் நிகழ்த்தினார். தொடர்ந்து இங்கிலாந்திலும் அவருடைய பயணங்களை மேற்கொண்டார்.

இதன்பின் சுவாமி இந்தியாவுக்குத் திரும்பினார். நான்கு ஆண்டுகள் வெளிநாடுகளில் இந்து மதத்தின் உயர்ந்த கொள்கைகளை பரப்பிவிட்டுத் தாய்நாட்டுக்குத் திரும்பிய மகானை இந்திய மக்கள் பெருமையுடன் வரவேற்றார்கள். சென்னையில் பதினேழு இடங்களில் அலங்கார வளைவுகள் போட்டு, இருபத்து நான்கு இடங்களில் வெவ்வேறு மொழிகளில் வரவேற்பு உரை கொடுத்து, மிகுந்த பெருமிதத்துடன் மக்கள் அவரைப் பாராட்டினார்கள்.

சுவாமி விவேகானந்தரை வங்காளமும் பெருமையுடன் பாராட்டிற்று, ஆலம்பஜாரில் இருந்த சுவாமிகளின் மடத்தில் இருந்த சகோதர சந்நியாசிகள் அவரைப் பாராட்டி வரவேற்றார்கள். சுவாமிஜி அவர்கள் அனைவருக்கும் தனது அனுபவங்களை விரிவாக எடுத்துச் சொன்னார். அதன் பலனாக, 'மக்களுக்குச் செய்யும் தொண்டே மகேசனுக்கு செய்யும் தொண்டு' என்ற புதிய விழிப்பு உணர்வு அவர்களிடையே உருவெடுத்தது.

சமயப் பணியில் ஊறி இருந்தவர்களிடம், நாடு முழுவதும் உள்ள எளிய மக்களின் துயரைத் துடைத்து உதவிகளை அளிக்க வேண்டும் என்ற உணர்வைச் சுவாமிஜி வேரூன்றச் செய்தார். இவ்வாறாக பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் வித்திட்ட பேரியக்கம் ஆலமரமாக வேரூன்றி வளர்ந்து விட்டது. அவரது சீடரான விவேகானந்தர் அதன் பெருமைமிக்க பணிகளை உலகறிய உயர்த்திக் காட்டினார்.

கடுமையான உழைப்பும், தொடர்ந்த பிரயாணங்களும், விரத வாழ்க்கையும் அவருடைய உடல்நலத்தைப் பாதித்தன. ஆனால், அந்த நிலையிலும் அவர் பேலூர் மடத்தை நிறுவி முடித்தார். இமயமலைச் சாரலில் மாயாவதியில் அத்வைத ஆசிரமத்தை அமைத்தார். மீண்டும் ஒருமுறை அமெரிக்காவிற்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் பயணம் மேற்கொண்டார். அவருடைய அயராத உழைப்பில் நாடு அதுவரை கண்டிராத பெருமையை அடைந்தது.

அயராத உழைப்பினால் அவருடைய உடல்நலம் மெல்ல மெல்ல தேய்ந்து குறையலாயிற்று. சகோதர சந்நியாசிகளைத் தாமே முன்வந்து பயிற்றுவிப்பதைக் குறைத்துக் கொண்டார். வெளியே அதிகம் வருவதும் குறைந்தது, மடத்தில் அறையில் இருந்து தியானத்தில் ஒன்றிப் போகத் தொடங்கினார். 'தனது கடமைகள் முடிந்ததும் அவர் நிர்விகல்ப சமாதியில் ஒன்றிவிடுவார்' என்ற பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் கூற்று உண்மையாகும் நாளும் வந்தது.

1902-ம் ஆண்டு, ஜூலை மாதம் நாலாம் தேதி, வெள்ளிக்கிழமை, காலையில் அவர் ஆலயப் பூஜா மண்டபத்துக்குச் சென்று கதவை மூடிக்கொண்டு, சுமார் மூன்று மணி நேரம் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். பிறகு அவர் அன்னை சக்தியின் மீது அமுதகான மாக ஒரு பாடலைப் பாடினார். அதைக் கேட்ட அனைவரும் மனம் நெகிழ்ந்து போனார்கள். அன்று அனைவருடனும் அமர்ந்து மதிய உணவை உட்கொண்டார். அதன்பின் மூன்று மணி நேரம் சீடர்களுடன் இருந்து சம்ஸ்கிருத பாட வகுப்பை நடத்தினார்.

மாலை நேரம், ஆலயமணி முழங்கிற்று. அவர் தனது அறைக்குச் சென்று, தியானத்தில் ஆழ்ந்தார். சுமார் ஒரு மணி நேரம் கடந்த பிறகு படுக்கையில் படுத்துக் கொண்டார். கையில் ஜபமாலை இருந்தது. மேலும் ஒருமணி நேரம் ஆயிற்று.

சுவாமிஜி திரும்பிப் படுத்து ஒருமுறை பெருமூச்சு விட்டார். அடுத்த பெருமூச்சு தொடர்ந்து வந்தது. பின் உடல் அமைதியில் அமிழ்ந்தது. தொண்டுகள் செய்து சோர்ந்த உடல் - அயராத உள்ளம் - அன்னையின் மடியில் அமைதியைத் தேடி நிலைத்துவிட்டது...

'நாற்பது வயதை நான் கடக்க மாட்டேன்!' என்று சுவாமிஜி சொல்லுவதுண்டு. அவர் முக்தி அடைந்தபோது முப்பத்தொன்பது முடிந்து சில மாதங்களே முடிந்திருந்தது. முக்தியிலும் ஞானஒளி பரப்பி நின்ற ஞானபானு வாழ்ந்து மறைந்த இல்லம், இன்றும் பக்தர்கள் வணங்கும் நிலையில் பேலூர் மடத்தினரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

●

சுவாமி விவேகானந்தர், 'கடவுளைத் தேடி' என்னும் தலைப்பில் வங்க மொழியில் பல கவிதைகளை எழுதியுள்ளார். அதுபற்றி வெகு சிலருக்கேத் தெரியும். அவருடைய கவிதைகளை தமிழிலும் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கின்றனர். அவற்றுள் 'வரம் பெறு கனவு நீயே' என்ற தலைப்பில் பாரிசில் இருந்தபோது ஆகஸ்ட்- 17, 1900 அன்று இயற்றி சிஸ்டர் கிரிஸ்டைனுக்கு அனுப்பியது.

# வரம் பெறு கனவு நீயே

தகவுறும் நன்மைகள் வந்தாலும் - அன்றித்
தாங்கொணாத் துன்பம் சேர்ந்தாலும்
முகந்தனில் மகிழ்ச்சி நிறைந்தாலும் - துயர்
மோதும் கடலலை எழுந்தாலும்

அஃதொரு கனவு! விளையாட்டு! - நாம்
அனைவரும் ஆடும் விளையாட்டு!
எஃகும் மகிழ்வில் திளைத்தாலும் - அன்றி
இதயம் குமுறி அழுதாலும்

வெய்யோன் மின்னித் திகழ்ந்தாலும் - அன்றி
விண்ணின் மழைதான் பொழிந்தாலும்
மெய்யில் யாரும் அவருடைய - எழில்
மேவும் உடையை அணிந்திடுவர்

கனவே, நல்வரம் பெற்றுவந்த - உயர்
கனவே, அருகே, தொலைவினிலே
நினது மனதின் குழப்பமெனும் - ஒரு
நீண்ட திரையை விரித்துவிடு.

கூரியதாகிய வரி அவற்றின் - நல்ல
கூர்மை தன்னைக் குறைத்து விடு!
சீரிய மென்மை உடையதுவாய் - வன்மை
தெரிவன வற்றை மெலிதாக்கு

மாயம் உன்பால் இருக்கிறது - மிக
வறண்ட பாலை நிலமதனை
நேயம் நிறைந்த உன் தீண்டல் - ஒரு
நேர்த்திப் பொழிலாய்ச் செய்கிறது.

கொடிய இடியின் முழக்கத்தை
கூவும் இசையாய் அது மாற்றும்!
மடிதல் எனுமோர் கொடுமையினை - அது
மாற்றி மகிழ்வைத் தந்து விடும்!

நன்றி: ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
சென்னை



(இன்றைக்கும் பொருந்தக்கூடிய வண்ணம் அருட்செல்வர் அவர்களால், ஓம் சக்தி 1984 ஜனவரி இதழில் எழுதப்பட்ட கட்டுரை)

தை மாதம் முதல் நாள் தமிழக மெங்கும் உள்ள மக்கள் பொங்கல் பண்டிகையைக் கொண்டா டுவார்கள்.

பொங்கல் பண்டிகையைத் தமிழர் திருநாள் என்பதை நான் ஏற்கவில்லை. அது உற்பத்திக்கும் செழிப்புக்கும் ஆதாரமான சூரியனுக்கும், வேளாண் மைக்கு ஆதரவுக் கருவிகளான நீருக்கும், ஏருக்கும், மாட்டுக்கும் வந்தனை செய்யும் நாள். அதன் முக்கியத்துவத்தை வேறு வார்த்தைகளில் மறைத்துக் குறைத்துவிடக் கூடாது.

சூரியன்தான் பூமி செழிப்பதற்குக் காரணம். சூரியனுடைய கதிர்களே பூதேவியைக் கருவுறச் செய்கின்றன. இதற்கு நன்றி தெரிவிக்கவே நாம் தை முதல் நாள், வெட்டவெளியில் சூரியன் உச்சியில் இருக்கையில் பொங்கலிட்டு அதை ஆகாயத்து சூரியனுக்கு நிவேதனம் செய்கிறோம்.

அதை அடுத்து மாடுகளை ஊர்வெளியில் விரட்டிப் பிடித்தும், அலங்கரித்து வண்டிகளில் பூட்டிக் கொண்டு ஊர்வலமாக வந்தும் மாட்டுப் பொங்கல் கொண்டாடுகிறோம். மாடும், நீரும், ஏரும் உழவின் துணைக் கருவிகள். இந்த மூன்றையும் போற்றுவதே பொங்கல் பண்டிகை!



ஆனால், இன்று இந்த மூன்றுக்குமே பஞ்சமும் நலிவும் தோன்றி இருக்கிறது. அதில் முதல் பஞ்சம் கால் நடைப் பஞ்சம். தமிழ்நாட்டில் இப்போது கால்நடை வளம் பயங்கரமான அளவில் சுருங்கிக்கொண்டு வருகிறது. ஒரு ஜோடி எருதுகள் வாங்க வேண்டுமானால், அதற்கு ரூ.5,000 (1984-ல் இருந்த அன்றைய மதிப்பில்) மூலதனம் வைக்கவேண்டி இருக்கிறது. கிடைக்கும் மாடுகளும் ஆரோக்கியமாக இல்லை.

இவ்வளவு ரூபாய் மூலதனம் வைத்து விவசாயி எப்படி மாடுகள் வாங்க முடியும்? எப்படி விவசாயம் செய்ய முடியும்?

கால்நடைகள் இவ்வளவு விலை அதிகமானதற்கு என்ன காரணம்? தமிழ்நாட்டின் உழவு மாடுகள் எல்லாம் அடிமாடுகளாக கேரள நாட்டுக்குச் செல்கின்றன. இதுதான் காரணம் (இன்றைக்கும் இந்த நிலை தொடரவே செய்வதாகச் சொல்லப்படுகிறது).

அங்கே அந்த மாடுகளைக் கொன்று அதன் இறைச்சியை வெளிநாடுகளுக்குக் கப்பலில் ஏற்றி அனுப்புகிறார்கள். அது ஒரு பெரிய தொழிலாகவே ஆகி, தமிழ்நாட்டின் ஆதார வளத்தையே சிறுகச் சிறுக அழித்து வருகிறது.

ஆனால், கருணையையும், இரக்கத்தையும் போதித்த மகான்கள் பலர் வாழையடி வாழையாகத் தொடர்ந்து வந்த நம் நாட்டில், உழவையும் தொழிலையும் வந்தனை செய்த இந்தத்

நா.மகாலிங்கம்

# ஏரும் நீரும் மாடும்



தெய்வத் தமிழ்நாட்டில் - பொங்கலிட்டு மாடுகளைப் போற்றிய நாட்டில் - அவற்றைக் காக்க எந்தச் சட்டமும் இல்லை.

ஓர் அரக்கக் கூட்டம் அவற்றை நூற்றுக்கணக்கில் வாங்கி கேரளத்திற்கு ஓட்டிச் செல்வதைத் தடுக்க ஆள் இல்லை.

பாலக்காட்டு கணவாய் வழியாகவோ, ஆரியங்காவு கணவாய் வழியாகவோ நீங்கள் கேரளத்திலிருந்து பஸ்ஸில் பயணம் செய்து தமிழ்நாட்டுக்கு வந்தால், மந்தை மந்தையாக மாடுகளை எதிரே ஓட்டிக்கொண்டுப் போவதைப் பார்க்கலாம். அலை அலையாக மாட்டுக் கூட்டங்கள் வந்துகொண்டே இருக்கும். "அடித்துக் கொல்லப்படவே அவை போகின்றன" என்பதை நினைத்துப் பார்த்தால், வேதனை தாங்க முடியாது போகும்.

இந்தக் கொடுமை பல ஆண்டுகளாக தினமும் நடந்து கொண்டிருக்கிறது. ஆனாலும், நம்மை ஆள்பவர்களில் ஒருவர்கூட இதைப் பற்றி கவலைப்பட்ட தாகவே தெரியவில்லை.

"இவை எல்லாம் அடிமாடுகள்; விவசாயத்துக்கு உதவாது" என்பது விதண்டாவாதம். கொழுத்த மாடுகளே போகின்றன.

அதிக விலை என்கிற ஆசை வலையில் விழுந்து வறுமையில் வாடும் தமிழக விவசாயிகள், தங்கள் மாடுகளை விற்று, தமிழக கால்நடை வளர்ச்சிக்குப் பெருந்தீங்கு செய்து வருகிறார்கள்.

ஒரு பக்கம் "கால்நடைச் செல்வங்களை வளர்ப்போம்!" என்று சொல்லிக்கொண்டே இப்படி தினசரி கால்நடைச் செல்வங்களின் அழிவு வேலையும் நடந்து கொண்டிருக்கிறது.

"கால்நடைகளை உணவுக்காகக் கொல்வது கூடாது" என்ற சட்டத்தை இயற்ற வேண்டியதன் அவசியத்தை மத்திய - மாநில அரசுகள் உணரவே இல்லை. அப்படி ஒரு சட்டம் செய்தால்தான் தமிழ்நாட்டில் எஞ்சியிருக்கும் கால்நடைச் செல்வத்தையாவது காப்பாற்ற முடியும். விவசாயிகளுக்கும் குறைந்த விலையில் ஏர் உழுவதற்கு மாடுகள் கிடைக்கும்.

அடுத்ததாக நீர்ப்பஞ்சம்.

தமிழ்நாட்டின் ஒரே நெற்களஞ்சியமான தஞ்சைக்கு உயிரளிக்கும் காவிரி நீருக்கும் இன்று ஆபத்து வந்துவிட்டது. இனியும் நம் விவசாயிகள் காவிரியில் முன்போல் அதிகமான நீர் வரும் என்று நம்பிக் கொண்டிருப்பது பெரும் பிசகு.

நம்மிடம் இருக்கும் தண்ணீரை எப்படி அதிகபட்சமாகப் பயன்படுத்தலாம் என்றுதான் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தஞ்சை மாவட்ட மக்கள் தங்களுக்கு இப்போது கிடைக்கும் காவிரி நீரைக் கொண்டு இப்போது பயிரிடும் நிலங்களைவிட, அதிக நிலங்களைப் பயிரிட என்ன வழி என்று ஆராயவேண்டும்.

தண்ணீரைச் சிக்கனமாகச் செலவழித்து விவசாயத்தை நவீனமுறையில் செய்ய வேண்டும். நெல்லை மட்டும் பயிரிடுவதை விடுத்து கரும்பு, பருத்தி, வேர்க்கடலை போன்ற பணப் பயிர்களைப் பயிரிட்டு பொருளாதாரத்தில் உயர முயற்சி செய்யவேண்டும்.

அடுத்ததாகத் தமிழ்நாட்டு வயல்களையே நம் விவசாயிகள் இனியும் நம்பிக்கொண்டிருக்கக் கூடாது. தமிழ்நாட்டு வேளாள மக்கள் சிறப்பாக உடல் உழைப்பும், வேளாண்மைத் தொழில்நுட்பமும் நன்கு தெரிந்தவர்கள்.

அவர்கள், இனி தண்ணீர் தாராளமாகக் கிடைக்கும் மற்ற பாரத நாட்டுப் பகுதிகளுக்கும் சென்று குடியேற முயற்சி செய்ய வேண்டும். அங்கு வேளாண்மை செய்யத் தொடங்கவேண்டும். தமிழ்நாட்டில் மற்ற பகுதிகளில் மட்டுமல்லாமல், இந்தியாவில் மற்ற மாநிலங்களிலும் வேளாண்மை செய்வதற்கு



“

சூரியனுடைய கதிர்களே பூதேவியைக் கருவுறச் செய்கின்றன. இதற்கு நன்றி தெரிவிக்கவே நாம் தை முதல் நாள், வெட்டவெளியில் சூரியன் உச்சியில் இருக்கையில் பொங்கலிட்டு அதை ஆகாயத்து சூரியனுக்கு நிவேதனம் செய்கிறோம்.




உரிய நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன.

அங்குள்ளவர்களுக்கு வேளாண்மைத் தொழில்நுட்பம் அவ்வளவாகத் தெரியாததாலும், உழைக்கும் மனப்பாங்கு இல்லாததாலும் அவை தரிசாகக் கிடக்கின்றன. அங்கு ஓடும் நதிகளின் நீர் முறையாகப் பயன்படுத்தாததால் வெள்ளத்தால் ஊர்கள் பாழாவதும், எஞ்சிய தண்ணீர் கடலில் போய்க் கலப்பதுமாக இருக்கிறது.

இந்திய நதிகளின் நீரில் 40 சதவிகித நீரைத்தான் இப்போது நாம் உபயோகித்து வருகிறோம்.

உத்தரப்பிரதேசம், ஆந்திரப் பிரதேசம் முதலிய மாநிலங்களில் ஏராளமான விளைநிலங்கள் தரிசாகக் கிடக்கின்றன. அந்த மாநிலங்களில் போதுமான தண்ணீர் வசதியும் இருக்கிறது. இருந்தாலும் நிலங்கள் தரிசாகக் கிடக்கின்றன.

தமிழ்நாட்டு வேளாளர்கள் அங்கு குடும்பங்களுடன் தைரியமாகச் சென்று குடியேறி வேளாண்மைத் தொழில் புரிய வேண்டும்.

அப்படிச் செல்லும் வேளாளர்களுக்குத் தமிழக அரசும், மத்திய அரசும் அவர்கள் சென்று குடியேறும் பகுதிகளில் நிலங்கள் வாங்குவதற்குக் குறைந்த வட்டியில் தாராளமாகப் பணம் கடன் கொடுத்து உதவி செய்ய வேண்டும். இதன் மூலமாக நாட்டின் பொருளாதாரத்தை யும், தேசிய ஒருமைப்பாட்டு உணர்ச்சியையும் வளர்க்க முடியும்.

கவிஞர் ஜோதி பெருமாள்

# ஞாயிறு போற்றுதும்...



நீலவானின் மஞ்சள் நட்சத்திரம் – எவரும்
நெருங்க முடியாத நெருப்புக்கோளம்
நிலத்தில் வாழும் உயிர்களுக்கு
நீதானே எப்போதும் ஆதாரம்

ஒவ்வொரு நாளும் ஓய்வின்றி
விடியலில் கிளம்பி வருகிறாய்
உருவத்தில் ஏதும் தேய்வின்றி
பருவ மாற்றத்தைத் தருகிறாய்

கிழக்கிலே குழந்தையாய்ப் பிறக்கிறாய்
ஒளிக்கரங்களால் உலகைத் திறக்கிறாய்
மழைக்காலத்தில் வெயில்தர மற(று)க்கிறாய்
மலையின்பின் முகத்தை மறைக்கிறாய்

பாலையில் வெம்மையாய்க் கொதிக்கிறாய்
சாலையோர மரங்களில் வழிகிறாய்
காலைப் பனித்துளியில் ஒளி(ர்)கிறாய்
மாலையில் மறுபுறம் மறைகிறாய்

உடலுக்கு நோயெதிர்க்கும் மருந்தானாய்
உணவுதரும் பயிர்கட்கு உணவானாய்
கடலினைக் கைதுசெய்து கார்மேகமாக்கினாய்
காற்று உருவாகக் காரணமானாய்

கோடையில் வெப்பத்துடன் எரிக்கிறாய்
கொன்றைப் பூவில் அழகாய்ச் சிரிக்கிறாய்
ஓடையில் நீந்திக் க(கு)ளிக்கிறாய்
குளிர்காலத்தில் இதமும் அளிக்கிறாய்

பாரதியின் வரிகளில் தெறிக்கிறாய்
பெண்களின் விழிகளில் தகிக்கிறாய்
சாதியென்றும் மதமென்றும் பேதமின்றி
சரிசமமாய் அனைவரையும் பார்க்கிறாய்

மரங்களின் கிளைகளில் மறைந்து கொண்டு
மழலைபோல் கண்ணாமூச்சி ஆடுகிறாய்
அந்தியில் வானத்தைச் செம்மையாக்கி
அழகுநிலவில் தண்ணொளியால் சூடுகிறாய்

நிலத்தாளில் நீயெழுதும் ஒளிக்கவிதை
நீர்நிலைகள் பிரதியெடுக்கும் தினமுமதை
பலகாலம் உயிரினங்கள் வாழ்ந்திடவே
பகலவனாய் வலம்வரும் புதுக்கவிதை

கதிரோன் நீ வருமுன்னே கழனிசென்று
கருத்துடனே ஏர்பிடித்து உழுகின்றோம்
கதிறுத்த நெல்மணியும் வீடுசேர- உன்
கருணையெண்ணி கரம்கூப்பித் தொழுகின்றோம்

புத்தரிசி வெல்லத்துடன் ஏலங்கூட்டி
புதுப்பானைப் பொங்கலிட்டுப் படைக்கின்றோம்
மஞ்சள் கரும்பு மாவிலை வாழையோடு
மனங்கனிந்து நன்றியுடன் போற்றுகின்றோம்

சூரியக் குடும்பத்தின் ஒப்பற்ற நாயகனே
சுற்றிவரும் கோள்களின் தலைவனே
உனக்குமுன் எழுவோர்க்கு வாழ்வில் இறக்கமில்லை
நீ எழுந்தும் உறங்குவோர்க்கு எந்நாளும் ஏற்றமில்லை

# பிரமிப்பை ஏற்படுத்தியது..!




**கா**ர்த்திகை மாதம் விரதமிருந்து, இருமுடித் தாங்கி, விண்ணைப் பிளக்கு மளவிற்கு சரணகோஷமிட்டு ஐயப்பனைத் தரிசிக்க வரும் பக்தர்களுக்கு சாஸ்தாவே பல ரூபங்களில் அற்புதக் காட்சி கொடுத்திருப்பதை 'என் வாழ்வில் ஐயப்பன்' எனும் கட்டுரையின் மூலம் தெரிந்துகொண்டு மெய்சிலிர்த்துப் போனேன்.

**– ந. சபரிநாதன், மயிலாடுதுறை.**

**இ**ந்து மதத்தை எப்படிக் காப்பாற்றுவது? என்று அருட்செல்வரே கேள்வியும் கேட்டு, அவரே தெளிவான விளக்கத்துடன் பதிலும் சொல்லிச் சென்ற பாங்கு என்னை வியக்க வைக்கிறது. பொறுப்பில் உள்ளவர்கள் அவசியம் பரிசீலிக்கவேண்டும்.

**– க. சொக்கலிங்கம், சென்னை.**

**ஆ**ண்டாள் கிளியை வடிவமைக்கும் அழகையும், அதன் வரலாற்றுச் சிறப்பையும் மிக நேர்த்தியாக கொடுத்திருக்கும் மோகனா வுக்குப் பாராட்டுகள்!

**– ர. கிருஷ்ணவேணி ரவிக்குமார், நீலகிரி.**

**அ**னுவாவி சுப்ரமணியர் மகிமையை நினைக்கும்போது, நேரில் சென்று முருகனைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டு விட்டது.

**– எஸ். வேலப்பன், ஈரோடு.**

**அ**திகாலை வழிபாட்டின் முக்கியத்துவத்தை 'மாதங்களில் நான் மார்கழி' கட்டுரை அருமையாக உணர்த்தியது.

**– நா. ரேணுகாதேவி நாகராஜ், விருதுநகர்.**

**து**ஞ்சான் இரவுகள் சிறுகதை, இரவில் தூக்கமின்மையால் அவதிப்படுபவனின் மனநிலையை அப்படியே படம்பிடித்துக் காட்டுகிறது.

**– ஆர். குமாரசாமி, தென்காசி.**

**மி**ராக்கிள் வெல்னெஸ் கிளினிக் பற்றிய கட்டுரைகளைத் தொடர்ந்து வாசித்து வருகிறேன். இச்சிகிச்சை முறையால் பக்கவிளைவு இல்லாமல் நோய்கள் குணமாகின்றது. இதுபோன்ற மருத்துவமனை எங்கள் மாவட்டத்திற்கு எப்போது வருமோ?

**– செ. வைத்தீஸ்வரன், சிவகங்கை.**


# ஓம் சக்தி

**ஆருயிர்களுக்கு எல்லாம் – நான் அன்பு செயல் வேண்டும்.**

– வள்ளலார்

**மலர்:39 | ஜனவரி 2022 | இதழ்:12**

நிறுவனர்: **நா.மகாலிங்கம்**

ஆசிரியர் - வெளியிடுபவர்: **ம.மாணிக்கம்**

Editor & Publisher : **M.MANICKAM**

அச்சிடுபவர்: **த.ராஜ்குமார்**

Printer : **T.RAJKUMAR, Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ், 32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், கோவை - 641 021.

பொறுப்பாசிரியர்: **எஸ்.கண்ணன்கோபாலன்**

நிருபர்: **இரா.பொன்னாண்டான்**

தலைமை வடிவமைப்பு: **கே.எம்.பிரசன்னா**

வடிவமைப்பு: **எஸ்.காமராஜ்**

அலுவலக நிர்வாகம்: **ஆர்.குமாரசாமி**





முகவரி: **ஆசிரியர், ஓம் சக்தி, சக்தி சுகர்ஸ் லிமிடெட், 180, ரேஸ்கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர் – 641 018,**

போன்; **0422 4322471, 0422 4322222**

வெளியிட்டோர்; **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

**E-mail : omsakthimagazine@gmail.com**

சுவாமி கமலாத்மானந்தர்

# பொங்கல் திருநாள்



பண்டைக்காலத்தில் தை மாதம்தான் தமிழ் ஆண்டின் தொடக்கமாக இருந்தது. இப்போது சித்திரை தமிழாண்டின் தொடக்கம்.

தேவர்களின் விடியற்காலைப் பொழுது மார்கழி மாதம். தேவர்களின் பகல் பொழுதின் தொடக்கம் தை மாதம். நமக்கு ஒரு வருடம் என்பது தேவர்களுக்கு ஒருநாள். அந்த வகையில் தை மாதம் முதல் நாள் தேவர்களின் ஒரு நாள் தொடங்குகிறது. அந்த நாளே நமக்கு ஓர் ஆண்டின் தொடக்கமாகவும் அமைகிறது. இந்த வகையில் தை மாதத்தைத் தமிழ் ஆண்டின் தொடக்கமாகக் கொள்வது பொருத்தமாகவே உள்ளது.

தை மாதம் முதல் நாளில் தமிழர்கள் சிறப்பாகக் கொண்டாடும் விழா பொங்கல் விழா.

உணவின் பெயரால் அழைக்கப்படும் பண்டிகை இது ஒன்றே. உணவின் பெயராலேயே இந்தப் பண்டிகை அமைந்திருப்பது, ‘ஒரு புதுமை’ என்றுதான் சொல்லவேண்டும்.

பொங்கல், தைப் பொங்கல், பொங்கல் திருநாள், பொங்கல் விழா - தமிழர் திருநாள், உழவர் திருநாள், அறுவடைத் திருநாள் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகிறது. பொங்கல் விழாவை ‘நன்றி பாராட்டும் விழா’ என்று சொல்லலாம்.

போகிப் பண்டிகை இந்திரனுக்கு உரியது; பொங்கல் பெருவிழா சூரியனுக்கு உரியது; மாட்டுப் பொங்கல் கால்நடைகளுக்கு உரியது. பண்டைய தமிழ்நாட்டில் ’தமிழர் விழா’ என்றால், அது இந்திர விழாவைத்தான் குறிக்கும்.



பொங்கல் பானைக்கு மஞ்சள், குங்குமம், விபூதி வைக்கும்போது – அந்தப் பானைக்கும் தெய்வத்திற்கு உரிய ஒரு முக்கியத்துவம் அன்றைய தினம் வந்துவிடுகிறது; தெய்வத்தின் நிலைக்கு உயர்ந்துவிடுகிறது.

திருவிளையாடல் புராணம், 'மழைக்கு அதி தேவதை இந்திரன்' என்று கூறுகிறது. இப்போது 'போகி பண்டிகை' என்றால், இந்திரனை யாரும் நினைப்பதில்லை.

'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்று பொங்கல் சமயத்தில் சொல்லும் ஒரு வழக்கமும் தமிழ்நாட்டில் இருந்து வருகிறது.

'போகி' இந்திரனின் ஒரு பெயர். இதற்கு 'போகங்களைத் தருபவன்' என்று பொருள்.

இங்கு, 'பழையன' என்றால், 'நீண்டகாலமாகப் பயன் படுத்தப்பட்டு, இனி உபயோகிக்க முடியாது' என்ற நிலைக்கு வந்த பொருள்களை மட்டுமின்றி பழக்க வழக்கங்களையும் குறிக்கும் என்று நாம் பொருள் கொள்ளவேண்டும்.

இங்கு, 'புதியன' என்றால், 'இது வரை நம்மிடம் இல்லாத, நமக்கு நன்மை தரக்கூடிய புதிய பொருள்களையும், புதிய பழக்க வழக்கங்களையும் கைக்கொள்ள வேண்டும்' என்று பொருள் கொள்ளலாம். நாம் போகியன்று இந்திரனிடம், 'இந்திரனே! கடந்த ஆண்டு எங்களுக்கு நல்ல மழை கொடுத்தாய். அதுபோல் இந்த ஆண்டும் எங்களுக்கு நல்ல மழை கொடு.

'இந்திரனே! கடந்த ஆண்டு எங்களுக்குப் போதிய மழை தரவில்லை, அப்படியில்லாமல் இந்த ஆண்டு எங்களுக்குப் போதிய மழை கொடு.

''இந்திரனே! கடந்த ஆண்டு நீ பெருமழை பெய்ததால், வெள்ளம் முதலியவற்றால் நாங்கள் பாதிக்கப்பட்டோம். இந்த ஆண்டு அவ்விதம் இல்லாமல் இருக்க அருள்வாய்; போதிய மழை தருவாய்'' என்று பிரார்த்தனைகள் செய்யவேண்டும். போகிக்கு முன்பு வீட்டிற்கு வெள்ளையடித்தல், போகியன்று வேண்டாத குப்பைக் கூளங்களை எரித்தல் என்பது இப்போதும் வழக்கில் இருக்கிறது.

வெளியே உள்ள குப்பைக் கூளங்களை எரிப்பது சுலபம். உள்ளத்தில் இருக்கும் தீய பழக்க வழக்கங்களை எரித்தல் - களைதல் என்பது கடினம். 'மனதில் இருக்கும் மாசுகள், அசுர குணங்கள், மிருக குணங்கள் போன்றவற்றை அழிப்பது - எரிப்பது கடினம்; ஆனால், அதை நாம் கட்டாயம் செய்யவேண்டும்' என்பதன் புற அடையாளமாகத்தான், போகியன்று வெளியே குப்பைக் கூளங்களை எரித்தல் நடைபெறுகிறது.

'போகி' என்ற சொல், 'போக்கி' என்றும் வழங்கப்படுகிறது.

'போக்கி' என்றால், 'தீயவற்றைப் போக்குதல் - அஞ்ஞானத்தைப் போக்குதல் - மிருக குணங்களைப் போக்குதல் - அசுர குணங்களைப் போக்குதல்' என்றெல்லாம் பொருள்.

இந்து மதத்தில், இந்தியாவில் சூரிய வழிபாடு என்பது மிகவும் பழைமையானது. வேதகாலம், உபநிஷத காலம், இதிகாச காலம், புராண காலம், தற்காலம் என்று எல்லாக் காலங்களிலும் சூரிய வழிபாடு இருந்திருக்கிறது.

சூரியன் நவகிரக நாயகர்களில் முதன்மையானவராக வழிபடப்படுகிறார். சூரிய நமஸ்காரம், சூரிய காயத்ரி ஜபம், ஆதித்ய ஹ்ருதய பாராயணம் ஆகியவை இன்றும் வழக்கத்தில் உள்ளன. கங்கை, யமுனை போன்ற நதிகளில் மகரசங்கராந்தியன்று மக்கள் நீராடுவதை விசேஷமாகக் கருதுகிறார்கள்.

இப்போதும் காலையில் சூரிய நமஸ்காரம் செய்யும் நல்ல வழக்கம், இந்தியா முழுவதும் இருந்து வருகிறது. இதில் ஆரோக்கியம் - ஆன்மிகம் ஆகிய இரண்டும் அடங்கியிருக்கின்றன.

பொங்கல் பானைக்கு மஞ்சள், குங்குமம், விபூதி வைக்கும்போது - அந்தப் பானைக்கும் தெய்வத்திற்கு உரிய ஒரு முக்கியத்துவம் அன்றைய தினம் வந்துவிடுகிறது; தெய்வத்தின் நிலைக்கு உயர்ந்துவிடுகிறது.

பொங்கல் பானையில் வைத்துக் கட்டும் இஞ்சி உடல் ஆரோக்கியத்தைக் குறிக்கிறது. மஞ்சள் பூமிக்கடியில் வளர்வது. இதை பொங்கல் பானையில் வைத்துக் கட்டுவது என்பது, 'நமது அறிவு ஆழமாகவும் மங்களகரமாகவும் இருக்கவேண்டும்' என்பதை உணர்த்துகிறது. கரும்பு மேல் நோக்கி வளர்வது - இனிப்புச்சுவை உடையது. அதுபோல் வாழ்க்கை மேன் மேலும் உயர்ந்து உயர்ந்து மேலே செல்லவேண்டும் - இனிப்புச் சுவை உடையதாக இருக்க வேண்டும்; இனிமையாக அமையவேண்டும்.

'மாட்டுப் பொங்கல் நாள்' என்பதில், 'கனுப் பொங்கல்' என்பதும் அடக்கம். பழைய தமிழ் இலக்கியங்களில் 'மாடு' என்ற சொல்லை, 'செல்வம்' என்ற பொருளில் பயன்படுத்தியிருக்கிறார்கள். இப்போது 'மாடு' என்ற சொல், கால்நடைகளைக் குறிப்பதாக வழக்கில் இருக்கிறது.

"

நம்மைவிட உயர்ந்தவர்கள், நம்மைவிட தாழ்ந்தவர்கள், நமக்குச் சமமானவர்கள் என்றுள்ள எல்லோரிடமும் நாம் சமத்துவ மனநிலையில் இருக்க வேண்டும் என்று, பொங்கல் விழா உணர்த்துவதாகக் கொள்ளலாம்.





'மாட்டுப் பொங்கலன்று மாலையில் குல தெய்வங்கள் வீடுகளுக்கு வருகிறார்கள்' என்பது ஐதிகம். பசு காமதேனுவின் அம்சம். அது காமதேனுவின் அடையாளமாகவும், காமதேனுவின் சந்ததியாகவும் விளங்குகிறது. பசுவின் உடலில் எல்லா தெய்வங்களும் இருக்கிறார்கள்.

'கோபூஜை செய்தால் சகல தோஷங்களும் விலகும், சௌபாக்கியங்கள் அனைத்தும் ஏற்படும்' என்ற கருத்து, தொன்றுதொட்டு இருந்து வருகிறது. பால், தயிர், மோர், வெண்ணெய், நெய், சாணம் ஆகியவற்றை மனிதகுலத்திற்கு பசு வழங்குகிறது. இதனால் அதன் வாழ்க்கையே ஒரு தியாக வாழ்க்கையாக விளங்குகிறது.

பெண்கள், 'கனுப் பொங்கல்' நாளில் முதல்நாள்



“

மனம் என்ற அடுப்பில் அன்பு, பொறுமை, ஆசையை நீக்குதல் ஆகிய மூன்றும் கற்களாகும். இந்த அடுப்பில் ஞானம் என்ற விறகை எரியச் செய்து, சிவானந்தம் என்ற இனிப்புச் சோறு பொங்கிச் சாப்பிடுங்கள்

பானையில் கட்டிய மஞ்சளை எடுத்து, வீட்டில் உள்ள மூத்தவர்களிடம் கொடுத்து வாங்கி, தங்கள் மாங்கல்யத்திலும் நெற்றியிலும் தேய்த்துக்கொள்வார்கள்.

இந்திரனும் சூரியனும் நம்மைவிட உயர்ந்தவர்கள். அவர்களை நாம் வணங்குகிறோம். கால்நடைகள் நம்மைவிட தாழ்ந்த பிறவி. மாட்டுப் பொங்கல் சமயத்தில் அவற்றையும் நாம் வணங்குகிறோம். கனுப் பொங்கல் நாளில், நம்மை ஒத்த மனிதப்பிறவியாகிய பெரியோர்களை வணங்கி, அவர்களின் ஆசிகளைப் பெறுகிறோம். அல்லது, நம்மை விட வயதில் சிறியவர்கள் நம்மை வந்து வணங்கி நமது ஆசிகளைப் பெறுவார்கள்.

நம்மைவிட உயர்ந்தவர்களை நாம் உயர்வாக மதிக்கிறோம். நாமாகச் சென்றுகூட அவர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள விரும்புகிறோம். நம்மைவிட தாழ்ந்தவர்களை நாம் தாழ்வாக மதிக்கிறோம். அவர்களுடன் நாம் தொடர்பு வைத்துக்கொள்ள விரும்புவதில்லை. அப்படி யில்லாமல் நம்மைவிட உயர்ந்தவர்கள், நம்மைவிட தாழ்ந்தவர்கள், நமக்குச் சமமானவர்கள் என்றுள்ள எல்லோரிடமும் நாம் சமத்துவ மனநிலையில் இருக்க வேண்டும் என்று, பொங்கல் விழா உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

சமத்துவ மனநிலை என்பது எல்லோரிடமும் பிரம்மத்தை - இறைவனைக் காண்பதாகும். அனைவரிடமும் சமத்துவ பாவம் கொள்ளவேண்டும்.

அஞ்ஞானத்தை இருளுக்கும், ஞானத்தை ஒளிக்கும் ஒப்பிடுவது மரபு. எனவே சூரியனை வழிபடுவது நம்முள் உள்ள ஆத்மஜோதியை - அருட்பெருஞ்ஜோதியை - நமக்கு நினைவு படுத்துவதாக இருக்க வேண்டும்.

பொங்கல் பற்றி சிதம்பர சுவாமிகள் இயற்றிய பாடல் இது:

அடியார் நிமலத் திருஅகத்துள் அன்பு
பொறுமை அவா அறுத்தல்
அடுப்பு ஆங்கு அமைத்து, மலக்
காட்டத்ததிக ஞானக்கனல் மூட்டி
மடியாதிருந்த உயிர்க் கலசம் வழிய
அருள்பேர் உலை வார்த்து
மாறாப்பெருமை சிவானந்த
மதுரச்சோறு தினம் பொங்கி.

(மனம் என்ற அடுப்பில் அன்பு, பொறுமை, ஆசையை நீக்குதல் ஆகிய மூன்றும் கற்களாகும். இந்த அடுப்பில் ஞானம் என்ற விறகை எரியச் செய்து, சிவானந்தம் என்ற இனிப்புச் சோறு பொங்கிச் சாப்பிடுங்கள்.) பொங்கல் சமயத்தில் முக்கோணமாக மூன்று கற்களை அடுப்பாக வைத்துத் தீ மூட்டுங்கள். அதில் புதுப் பானையை வைத்து பால் காய்ச்சிப் பொங்கலிடுங்கள்.

முக்கோணமாக மூன்று கற்களை அமைத்தல் என்பது மனம், வாக்கு, காயம் என்ற முக்கரணங்களைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். தீ மூட்டுதல் என்பதற்கு முக்கரணங்களையும் தவத்தில் ஈடுபடுத்தவேண்டும் என்று பொருள் கொள்ளலாம். பால் காய்ச்சிப் பொங்கலிடுவது என்பது, மனிதன் தன்னிடமுள்ள தெய்விகத்தை வெளிப்படுத்தி பரிபூரண ஆத்மஞானம் (சிவானந்தம்) பெறுவதாகும்.

பெரியோர்களின் ஆசிகள், முன்னோர்களின் ஆசிகள், குருவின் ஆசிகள், குரு போன்றவர் களின் ஆசிகள், தெய்வங்களின் ஆசிகள் மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாதவையாகும். ●

# இராமலிங்க அடிகள்!

வெள்ளாடை கட்டியவோர் விவேகா னந்தர்!
வெளிச்சத்தில் பிறந்திட்ட இயேசு நாதர்!
துள்ளிவரும் உணர்ச்சிகொண்ட ராம கிருஷ்ணர்!
சொல், இசைக்கத் தெரிந்தவொரு புத்த தேவர்!
முள்ளெடுக்கும் உழவாரப் படையை விட்டு
முன்வந்து கைகட்டி நின்ற அப்பர்!
தள்ளாடி நிற்காத ஞானி! உண்மைத்
தத்துவமாய் வீசியவோர் அருளின் தென்றல்!

அறிவாலே பயனென்ன? பிறிதின் நோயால்
அவலமுறா உள்ளத்தைக் கொண்டால் என்றே
நிறைநெஞ்ச வள்ளுவனார் வினாத்தொ டுப்பார்!
நீரின்றி வாடுகின்ற பயிரைக் கண்டால்
பிரிவுநிலைத் தலைவியைப்போல் உடல்இ ளைத்துப்
பேச்சற்றே அழுகின்றார் வடலூர் வள்ளல்!
அறிவாளர் அழுவார்கள்! அழுத தால்தான்
அருட்பாவாய்க் கிடைக்கிறது கண்ணீர் முத்து!

உருக்கமென்றால் வாசகனார் உருவம் வந்தே
உள்ளத்தில் தெரிவதுண்டு! சிறந்த சொல்லின்
சுருக்கமென்றால் வள்ளுவனார் வந்து நெஞ்சில்
சுவடுகளைப் பதிப்பதுண்டு! காதல் மேனி
நெருக்கமென்றால் அதிவீர ராமன் வந்து
நிற்பதுண்டு நம்மிடத்தில்! அன்பு நெஞ்ச
இரக்கமென்றால் இராமலிங்கர் மெல்ல வந்தே
இதயத்தின் கதவுகளைத் திறப்ப துண்டு!

கைகட்டி அவரிருந்தார்! இருந்தும் கூடக்
காரிருளில் எதிர்நீச்சல் அவர்தான் இட்டார்!
பையபைய நடைபயின்றார்! இருந்தும் கூட
பண்பாலே அருட் பாதை விரைந்து சென்றார்!
மெய்மறைத்துத் துணியிட்டார்! இருந்தும் கூட
மிகவிளக்கமாய் உள்ளம் திறந்து வைத்தார்!
தைக்கரும்பாய் உடல் இளைத்தார்! இருந்தும் கூடத்
தனையண்டி வந்தவர்க்கோ இனிப்பளித்தார்!

மனம், வாக்கு, காயத்தைப் புனிதம் ஆக்கி
வாழ்விக்க வந்தவர்தான் இராம லிங்கர்!
மனம்தூய்மை அடைவதற்கே சபைஅ மைத்தார்!
வளமான வாக்குபெற சங்கம் வைத்தார்!
தினம்வாடும் காயத்தின் பசியைப் போக்க
திறந்துவைத்தார் அன்னமிடும் தருமச் சாலை!
இணைந்தசாலை, சங்கம், சபை என்ப தாலே
இதயம், நா, உடல் மூன்றை அவர்வாழ்வித்தார்!



எம்.மரிய பெல்சின்

# புத்துணர்ச்சி தரும் புதினா

பருவநிலை மாறுபாடு, வயித்துக்கு ஒத்துக்கிடாத சாப்பாட்டை சாப்பிடுறதால பலபேருக்கு வாந்தி, வயித்துப்போக்கு வந்து அவதிப்படுறாங்க. இந்த மாதிரி பிரச்னைக்கு என்னென்னவோ சிகிச்சை எடுத்தும்கூட தீர்வு கிடைக்காம பலபேர் சிரமப்படுறதை பார்க்கமுடியுது.

இதுக்கெல்லாம் எளிமையான சிகிச்சைகள் இருந்தாலும் அதை பலபேர் முயற்சி பண்ணாம இருக்காங்கறதுதான் பிரச்னையே. அங்க சுத்தி இங்க சுத்தி கடைசியா அனுபவ மருத்துவம் பக்கம் வந்தாலும்கூட பலன் கிடைக்கும்தான். ஆனா, கொஞ்சம் பொறுமையா சில விஷயங்களைக் கடைப்பிடிக்கணும். அப்படி செஞ்சா நிச்சயம் பலன் கிடைக்கும்.

இந்தப் பிரச்னைக்கு புதினா ரொம்ப நல்ல மருந்து. பகல் நேரங்கள்ல புதினா ஜூஸ் போட்டு குடிச்சிட்டு வந்தா நல்ல பலன் கிடைக்கும். கைப்பிடி அளவு புதினா இலைகளோட சின்னத்துண்டு இஞ்சி சேர்த்து அரைச்சி தண்ணி விட்டு வடிகட்டி அரை எலுமிச்சம்பழத்தோட சாறை பிழிஞ்சி விட்டு தேன், நாட்டு சர்க்கரை சேர்த்துக் குடிக்கலாம்.

ஒருநாளைக்கு எத்தனை தடவை வேணும்னாலும் குடிக்கலாம். அதுக்காக மொத்தமா ஜூஸ் தயாரிச்சி ஃப்ரிஜ்ல வச்சிருந்து குடிக்கக்கூடாது. அப்பப்போ தயாரிச்சி குடிக்கிறதுதான் நல்லது. ராத்திரி நேரமா இருந்தா கைப்பிடி புதினா இலையை எண்ணெய் விடாம வதக்கி தண்ணி விட்டு கொதிக்க வச்சி குடிக்கலாம்.

புதினாவை இப்பிடி ஜூஸாவோ, கசாயமாவோ செஞ்சி குடிச்சாலே வாந்தி, வயித்துப்போக்கு சரியாயிரும். பெரிய செலவு எதுவும் கிடையாது. இதை நாமளே தயாரிச்சி குடிக்கணும். கடைகள்ல இந்த ஜூஸ் விக்கிறது இல்லை. ஆனா, புதினான்னு சொன்னதுமே பலபேர் முகம் சுளிப்பாங்க. இன்னும் சிலபேர் அது பூக்காத ஒரு தாவரம். அதை சாப்பிடக்கூடாதுன்னு மூடநம்பிக்கையை விதைக்கிற மாதிரி பேசுவாங்க. அப்பிடி எதுவும் ஆகாது. அதற்கான சான்றுகள் எதுவும் கிடையாது.

புதினா ஜூஸ் மட்டுமில்லாம புதினா துவையல், சட்னி செஞ்சி சாப்பிடலாம். வெறும் புதினாவா இல்லாம அதோட கொஞ்சம் மல்லித்தழை, கறிவேப்பிலை சேர்த்துக்கிடலாம். சாப்பிடுறதுக்கும் நல்ல சுவையா இருக்கும். சுவைக்காக கொஞ்சம்

வாந்தி, பேதி நேரங்கள்ல மாதுளம்பழச்சாறு குடிக்கிறது ரொம்ப நல்லது. மாதுளை முத்துக்கள் மட்டுமில்லாம அந்த பழத்தோட தோலையும் சேர்த்து அரைச்சி குடிக்கிறது நல்லது. மாதுளம் பழத்தோட பிஞ்சு, பூ இருந்தா அதையும் அரைச்சிக் குடிக்கலாம். மாதுளம்பிஞ்சை நல்லா அரைச்சி மோர் சேர்த்தும் குடிக்கலாம். இந்த மாதிரி ரொம்ப எளிமையான வைத்தியத்தை செஞ்சாலே போதும். எந்த பக்கவிளைவும் வராது. ஆனா, கைமேல பலன் கிடைக்கும். இதுமாதிரி விஷயங்களை கிராமத்து மக்கள் ரொம்ப சாதாரணமா செய்வாங்க.

ஒரு துண்டு வசம்போட 10,15 மிளகை சேர்த்து தட்டிப் போட்டு ஒரு டம்ளர் தண்ணி விட்டு நல்லா காய்ச்சி வடிகட்டி குடிச்சிட்டு வந்தாலும் வாந்தி, வயித்துப்போக்கு சரியாகும்.

வில்வப்பழத்தோட சதைப்பகுதியை சர்க்கரை சேர்த்து கொதிக்க வைக்கணும். அது கட்டியானதும் அடுப்புல இருந்து இறக்கின பிறகு ஒரு ஸ்பூன் அளவு சாப்பிட்டு வந்தா வாந்தி மட்டுமில்லாம குமட்டலும்கூட சரியாகும்.

வாந்தி, வயித்துப்போக்கு நேரங்கள்ல வயித்துவலியும் சேர்ந்து பாடாப்படுத்தும். இந்தமாதிரி நேரங்கள்ல வசம்பை தீயில சுட்டு அதோட சாம்பலை கொஞ்சம் தண்ணிவிட்டு குழைச்சி தொப்புள் பகுதியில பூசலாம். இந்த வைத்தியத்தை பெரும்பாலும் குழந்தைங்களுக்குத்தான் செய்வாங்க. பெரியவங்களுக்கு செய்றதும் தப்பே இல்ல. ஆமணக்குச்செடியோட துளிர் இலைகளை விளக்கெண்ணெய் விட்டு வதக்கி பொறுக்குற சூட்டுல தொப்புள்ல வச்சாலும் வயிறுவலி சரியாகும்.



உளுந்து, தேங்காய் சேர்த்துக்கிடலாம்.

வாந்தி, வயித்துப்போக்கு நேரங்கள்ல புதினா மட்டுமில்லாம ஓமம் சாப்பிட்டாலும் பலன் கிடைக்கும். ஓமத்தை லேசா வறுத்து வெல்லம் சேர்த்து சாப்பிடலாம். இல்லன்னா ஓமத்தை தண்ணி விட்டு கொதிக்க வச்சி வடிகட்டிக் குடிக்கலாம். கடைகள்ல ஓமத்தீநீர், ஓமவாட்டர்ன்னு விப்பாங்க. அதையும் குடிக்கலாம். ஆனா, முன்னாடி மாதிரி இப்போ ஓம வாட்டர்ல அவ்வளவு வீரியம் இல்ல, ஆனாலும் பலன் கிடைக்கும்.

இந்தமாதிரி நேரங்கள்ல நாம சாப்பிடுற சாப்பாட்டுல கொஞ்சம் எச்சரிக்கையா இருக்கணும். முடிஞ்சா காலைல மாதுளை, திராட்சை பழங்கள் சாப்பிடுறது நல்லது. எலுமிச்சை ஜூஸ், எலுமிச்சை சாதம் சாப்பிடலாம். கஞ்சியை நல்லா குழைய வேகவச்சி சாப்பிடணும். பூரி, சப்பாத்தி, தோசை சாப்பிடக்கூடாது. கொஞ்ச நாளைக்கு இட்லி, இடியாப்பம், நல்லா குழைய வேக வச்ச கஞ்சி, தேங்காய் கசகசா சேர்த்து அரைச்ச துவையல் சாப்பிடுறது நல்லது.

●

காயத்ரி கணேஷ் | படங்கள்: கே.எம்.பிரசன்னா



# அழகன் முருகனின் ஆற்றுப்படை

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், ஆவினன்குடி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர்ச்சோலை என்று ஆறு எண்ணிக் கையிலான தலங்களை இன்று அறுபடை வீடுகள் என்கிறோம்.

முருகன் ஆறுமுகன். சடாட்சரன் என்று ஆறாலேயே சிறப்புப் பெற்றதால் அவன் அருளும் தலங்களையும் அறுபடை வீடு என்று ஆறு என்னும் எண்ணிக்கை தோன்றக் குறிப்பிடுகிறோம். நக்கீரர் ஐந்தாம் படைவீடாக இன்று நாம் கருதும் திருத்தணியைப் பாடுகிறாரா என்று பார்த்தால் அப்படிக் குறிப்பிட்டுப் பாடவில்லை. மாறாக அவன் அருளும் குன்றுகளின் மகிமையைத் தொகுத்துப் பாடுகிறார். அப்படியானால் திருத்தணி அறுபடை வீடுகளில் ஒன்று இல்லையா என்று கேட்டால் அதற்கு அறிஞர்கள் தரும் விளக்கம் சுவாரஸ்யமானது.

‘நக்கீரர் ஆற்றுப்படை பாடினார். ஆற்றுதல் என்றால் வழிகாட்டுதல். முருகப்பெருமான்

எழுந்தருளியிருக்கும் தலங்களின் சிறப்பு களைச் சொல்லி அவற்றுக்கு வழிகாட்ட வேண்டும் என்பதே நக்கீரரின் நோக்கம். அதற்காகவே பாடினார். ஆற்றுப்படை என்பதுதான் மருவிப் பின் அறுபடை என்று ஆறு என்னும் எண்ணிக்கையில் தொடர்புபடுத்தப்பட்டது.

பிற்காலத்தில் கச்சியப்ப சிவாசார்யார் திருத்தணி குறித்துச் சொல்லும்போது, 'மலைகளில் சிறந்தது தணிகை மலை' என்று குறிப்பிட்டதால் அனைத்து மலைகளுக்கும் பொதுவாக திருத்தணிகையை ஐந்தாம் படைவீடாக மாற்றி ஆற்றுப்படையை நாம் ஆறுபடையாக மாற்றிவிட்டோம்" என்கிறார்கள்.

தணிகை மலை, நக்கீரர் பாடிய பிற மலைத்தலங்களுக்கு சற்றும் குறைவில்லாத சிறப்பினை உடையது. பல்வேறு அடியார்கள் சென்று வணங்கி அருள்பெற்று ஞானம் அடைந்த தலம். அப்படிப்பட்ட தலத்தை ஐந்தாம் படைவீடாக நம் முன்னோர்கள் ஆக்கியது மிகவும் பொருத்தமே.

இறைவன் எங்கும் நிறைந்தவன். தூணிலும் இருப்பான்; துரும்பிலும் இருப்பான். இதையும் ஆடுபவன். குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்பதால் குன்றுகளில் குமரன் இருந்து அருளும் விதத்தையும் அங்கு வாழும் குறவர்கள் அவனைக் கொண்டாடும் தன்மையையும் பாடுகிறார்.

பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன் .
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பின்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர

மாலை அணிந்துகொள்ளுதல் இன்று விழாக்களின்போது செய்யும் செயல். ஆனால் நம் மரபிலோ அது அன்றாடம். மலைகளில் எங்கும் மலர்கள் செழித்துக்கிடக்கும். நறுமணம் தரும் காய்களும் கொடிகளும் அங்கே விளைந்து கிடக்கும். அப்படிப்பட்ட இயற்கைப் பொருள்களைக் கொண்டு தினமும் புதிய மாலைகளைச் செய்து அணிந்துகொள்வது

> குன்றில் குறவர்கள் ஆடுவதால் இதற்குக் குன்றக் குரவை என்று பெயர். அதுவே மேய்ச்சல் நிலத்தில் ஆடினால் ஆய்ச்சியர் குரவை. முன்னது முருகனுக்கு என்றால் பின்னது கண்ணனுக்கு, கண்ணனும் முருகனும் நம் மரபில் கொண்டாட்டங்களின் கடவுள்.

தாண்டி சகல ஜீவன்களுக்குள்ளும் இருந்து அருள்வான் என்றெல்லாம் நம் ஞான நூல்கள் சொல்கின்றன. அப்படிப்பட்ட ஞானத்தை எல்லோரும் அடைவது இயல்பன்று என்பதால் கோயில்களையும் புராண நிகழ்வுகள் நடந்த தலங்களையும் சுட்டி அவற்றைச் சிறப்புத் தலங்களாகவும் அங்கு வழிபட்டால் நல்லருள் கிடைக்கும் என்றும் பெரியோர்கள் வகுத்தனர்.

அப்படி மகிமை நிறைந்த மருகன் தலங்களை எடுத்துச் சொல்லிவிட்டால் மக்களுக்கு விளங்கி விடும் என்பதால் அவற்றைத் தொகுத்துச் சொல்வதாகவே இந்தத் திருமுருகாற்றுப்படையினைப் பாடுகிறார் நக்கீரர். முருகன் கோயில்தோறும் அருள்பவன் மட்டுமன்று குன்றுதோறும் மலைவாழ் குறவர்களின் வழக்கம்.

முருகனை வழிபடச் செல்கிறார்கள். அவர்கள் குடியின் பூசாரி போன்றவன் பச்சிலைக் கொடிகளை மாலையாகக் கட்டி அதில் நறுமணம் வீசும் சாதிக்காயையும், தக்கோலக்காயையும், காட்டு மல்லியையும், கூதாளமலரையும் சேர்த்துக் கட்டி அந்த அழகிய மணம் வீசும் மாலையை அணிந்தவனாகி, இதோ முருகப்பெருமான் எழுந்தருளப் போகிறான் என்று மக்களின் முன்னே சொல்கிறான்.

முருகன் இறைவன் மட்டுமல்ல அவர்களின் தலைவனும்கூட. தலைவன் காட்சி கொடுத்தால் தொண்டர்கள் சும்மா இருப்பார்களா... கொண்டாட்டமாகி விடுகின்றனர். அவர்கள்



தங்கள் கைகளில் வல்வில் ஏந்தி இருக்கிறார்கள். வில் என்றால் தெரியும். அது என்ன வல்வில்... வல் என்பது வலிமை என்பதைக் குறிக்கும்.

குறவர்கள் வேட்டையாடுதலைத் தொழிலாகக் கொண்டவர்கள். பொதுவாக அம்பு எய்தால் அது எய்த பொருளைத் தாக்கி வீழ்த்தும். ஆனால் வல் வில் அப்படி அல்ல... ஒரு விலங்கைக் குறிவைத்து அம்பு எறிந்தால் அது அந்த விலங்கைத் துளைத்துச் செல்வதோடு பிற விலங்குகளையும் சென்று தாக்கிப் பின் ஓயுமாம்.

ராமனைச் சொல்லும்போது ‘வல்வில் ராமன்’ என்று சொல்வதுண்டு. அவனின் ஓர் அம்பு ஏழு மராமரங்களைத் துளைத்து வெளியேறியது. அப்படிச் செல்லும் வில்லே வல்வில். குன்றில் இருக்கும் குறவர்களும் அப்படிப்பட்ட வல்வில்லை உடையவர்கள்தாம். வேடர்கள் என்றாலே விலங்குகளைக் கொல்பவர்கள் என்பதால் தன்மையினால் முரடர்களாக இருப்பார்கள் என்ற எண்ணத்தை மாற்றும் வகையில் இருக்கிறது அவர்களின் கூட்டம்.

அவர்களின் அழகுணர்ச்சி இங்கே வருணிக்கப்படுகிறது. காடுகளில் சந்தனமரங்கள் நிறைந்து காணப்படும். குறவர்கள் அந்த சந்தனத்தை எடுத்து அரைத்துப் பூசித் தம் மார்பில் அணிந்திருக்கிறார்கள். அதனால் வாசம் வீசுவதோடு மட்டுமல்லாமல் அவர்களின் மார்பும் பளபளக்கின்றன. அவர்கள் மலைத் தேனை எடுத்து மூங்கிலில் சேமித்துவைத்து அதைப் புளிக்கவும் வைத்திருக்கிறார்கள். அந்த பானத்தை அருந்தி மகிழ்ச்சியில் ஆடிக்கொண்டு வருகிறார்கள்.

அவர்கள் கைகளில் தொண்டகம் என்னும் பறை இருக்கிறது. அந்தப் பறையை அடித்துக்கொண்டு தம் சுற்றத்தோடு குரவைப் பாடலைப் பாடி வருகிறார்கள். குன்றில் குறவர்கள் ஆடுவதால் இதற்குக் குன்றக் குரவை என்று பெயர். அதுவே மேய்ச்சல் நிலத்தில் ஆடினால் ஆய்ச்சியர் குரவை. முன்னது முருகனுக்கு என்றால் பின்னது

கண்ணனுக்கு, கண்ணனும் முருகனும் நம் மரபில் கொண்டாட்டங்களின் கடவுள். அதனால்தான் ஆடுதலும் பாடுதலும் இவர்களுக்கு முதன்மைப் படுத்தப்பட்டன.

விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிணா ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு

குறவர்கள் மட்டுமல்ல அவர்கள் இணைகளான குறத்திகளும் முருகனை வழிபட மகிழ்ச்சியோடு புறப்படுகிறார்கள். அவர்களுக்கு முருகனைக் காண்பது என்றால் மிகுந்த மகிழ்ச்சி. அதனால் அவர்கள் தங்களை அழகு செய்துகொண்டு புறப்படுகிறார்கள். பார்ப்பதற்கு வண்ண மயில்களைப் போல இருக்கிறார்கள். முருகன் பல வண்ண மயில்களோடு வலம் வருவதைப்போன்று இருக்கிறது அந்தக் காட்சி.

வண்ணங்கள் அவர்களுக்கு எங்கிருந்து வருகின்றன என்றால் அது அவர்கள் அணிந்திருக்கும் மலர்களிலிருந்து. அவர்கள் அழகாக வரிசையாகப் பல வண்ண மலர்களை அடுக்கிக் கட்டியிருக்கிறார்கள். எப்போதுமே ஒரே வண்ண மலரால் கட்டப்பட்ட மாலையை விடப் பல வண்ண மலர்களால் தொடுக்கப்பட்ட கண்ணியே அழகு வாய்ந்தது. அவர்கள் ரசனையோடு, மலர்ந்த மலர்களையும் மலராத அரும்புகளையும் எடுத்து அவற்றைத் தம் விரல்களால் மலர வைத்துத் தழையாகக் கட்டி அணிகிறார்கள். அவர்களின் தலையில் மலர், இடுப்பில் மலர், மார்பில் மலர் என்று மலரே மங்கையாய் வந்ததுபோன்று காட்சி தருகிறார்கள்.

இதெல்லாம் என்ன பக்தியைப் பாட வந்து பெண்களைப் பாடிக்கொண்டிருப்பது என்று தோன்றுகிறதா? இது மிக எளிய உலகியல் உண்மை. நாம் எங்கு சென்றால் நம்மை அலங்கரித்துக் கொள்வோம்? நம் மனதுக்குப் பிடித்தமான இடங்களுக்குச் சென்றால்தானே... நாம் செல்லும் இடத்தில் இருக்கும் முக்கியஸ்தரின் கவனத்தைக் கவர்ந்தாக வேண்டும் என்றால்தானே... பார்க்கப் போகிறவரின் தகுதிக்கு ஏற்ப அல்லவா நம் உடையும் மாறும்.

குறவர் இனப் பெண்கள், முருகன் மீது தீராத அன்பையும் பக்தியையும் உடையவர்கள். அவன் பார்வை தங்கள் மீது விழவேண்டும் என்று நிற்பவர்கள். அவன் சந்நிதியில் நிற்கும்போது மகிழ்ச்சியோடும் உற்சாகத் தோடும் நின்று ஆடிப்பாட விரும்புபவர்கள். அப்படிப்பட்ட பெண்கள் இங்கே தம்மை அழகு



செய்துகொள்ள விரும்புவது என்பது பக்தியின் உச்சம் அல்லவா...

பாகவதத்தில் ஒரு சுவாரஸ்யமான நிகழ்வு உண்டு. கோபியர்கள் அழகு செய்துகொண்டு கண்ணன் வந்ததும் அவனோடு ஆடிப்பாடி மகிழத் தயாராக இருப்பார்களாம். ஒருமுறை கண்ணன் வேறு இடங்களுக்குச் சென்றுவிட்டதால் கோபியர்களைச் சந்திக்க வரமுடியாத நிலை. இதை அந்த கோபியரும் அறிவர். ஆனாலும் அவர்கள் தங்களை அலங்கரித்துக்கொள்வதை மட்டும் விடவேயில்லை. அப்போது ஒருத்தி கேட்டாளாம், “கண்ணன்தான் இல்லையே... எதற்கு இப்போது அலங்காரம் செய்து கொள்கிறீர்கள்?” என்று.

அதற்கு ஒரு கோபி, “கண்ணன் எப்போது வேண்டுமானாலும் வரட்டும். அவன் மாயக்கண்ணன், ஒரே நேரத்தில் அவனால் எங்கும் இருக்க முடியும். அப்படி அவனுக்கு எங்கள் நினைவுவந்து இங்கே எப்போது வேண்டுமானாலும் வந்து நிற்கலாம். அப்போது நாங்கள் அலங்கரித்துக்கொள்ளாமல் இருந்தால் அவன் மனம் வாடிவிடும். அவனைக் காக்க வைத்துவிட்டு நாங்கள் அலங்கரித் துக்கொள்வது நன்றாக இருக்காது. அதனால் அவன் எப்போது வந்தாலும் அவனோடு ஆடிப்பாட நாங்கள் தயாராக இருக்கிறோம்” என்று சொன்னாளாம்.

இது வாழ்வின் பெருந்தத்துவம். இந்த உலக வாழ்க்கை எப்போது வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் நாம் அறியாமலேயே முடிந்துவிடலாம். காலம் காலனாக வந்து சடுதியில் நிற்கலாம். அப்போது நாம் அதற்குத் தயாராக இருக்க வேண்டாமா... நாம் அந்த இறைவனின் சிந்தனையிலேயே இருந்தால் தானே... அதற்காக நம்மைத் தகுதிப்படுத்திக் கொண்டே இருந்தால்தானே அந்த கணத்தை மகிழ்ச்சியோடு துணிச்சலோடு எதிர்கொள்ள முடியும்? கடைசிக் காலத்தில் இரு கொஞ்சநேரம் பூஜை செய்துவிட்டு வருகிறேன் என்று பதில் சொல்ல முடியுமா? முடியாது அல்லவா...

அப்படித்தான் இறைவனின் சந்நிதிக்குச் செல்லும் தருணமும். அந்தக் கணத்தில் அவனின் தரிசனத்தை நாம் கண்டு அவன் அருட்பார்வைக்குப் பாத்திரம் ஆக வேண்டாமா? அதற்குத்தான் குறவர் இனப் பெண்கள் தம்மை அலங்கரித்துக்கொண்டு தழை ஆடை உடுத்திச் செல்கிறார்கள். தழை ஆடை என்றால் தழையத் தழையத் தொடுத்த மலர்களால் ஆன ஆடை. அதைக் கொண்டு அவர்கள் தங்களை அலங்கரித்துச் செல்கிறார்கள். அவர்களுக்கு அருள் வழங்க அங்கே முருகன் எழுந்தருள்கிறான். அவன் அருணோதயம் போல் எழுந்தருளும் அழகினை இனிக் காண்போம்.

**-அடுத்த இதழில்**





# கண்ணனை கட்டிப் போட்ட சகாதேவன்

மகாபாரதத்தில் நடைபெற்றதாகச் சொல்லப்படும் ஒரு நிகழ்வின் மூலம் இறைவனை வென்றவர்களும் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், மாசற்ற பக்தி இருந்தால் தான் அது சாத்தியப்படும் என்பதை மறுக்க இயலாது.

குருக்ஷேத்திரப் போர் ஒன்றுதான் வழி என்று ஆன பிறகு சகாதேவனுக்கும் கண்ணனுக்க மிடையே நடைபெற்ற உரையாடல் இது...கண்ணனைக் கட்டிப் போடுவேன் என்று சொன்ன சகாதேவனிடம், “என்னைக் கட்டிப் போட முடியுமா உன்னால்? என்னைக் கட்ட முடியாமல் யசோதை பட்ட கஷ்டம் உனக்குத் தெரியாதா சகாதேவா, என்னைக் கட்ட யாராலும் முடியாது” என்றார் கிருஷ்ணர்.

“உனக்கு உன்னைப் பற்றி அதீத நம்பிக்கை கண்ணா... நான் நினைத்தால் உன்னை இந்த இடத்திலேயே கட்டிப்போடுகிறேன். முடிந்தால் இந்த இடத்திலிருந்து நகர்ந்து செல் பார்க்கலாம்” என்று சொன்னபடி அப்படியே தியானத்தில் ஆழ்ந்துவிட்டான் சகாதேவன்.

கண்களில் தெரிந்த கண்ணனை இதயத்துக்கு இழுத்து வந்து நிறுத்தினான். மானசீகமாக கண்ணனின் கால்களில் விழுந்தபடியே கண்ணனின் கால்களை மிக பலமாகக் கட்டிக் கொண்டான்.

அந்த இடத்திலிருந்து அசைய முயன்ற கண்ணனின் கால்கள் மிகப் பலமாக அழுத்தப் பட்டன. கொஞ்சம்கூட அவனால் அசைய முடியவில்லை. பாணங்கள் மூலமோ அல்லது மந்திரத்தாலோ தன்னை அவன் கட்டியிருந்தால் நொடியில் அதை அறுத்திருப்பான் கண்ணன். ஆனால், ஒரு பக்தனாக... தன் அன்பினால் கட்டிப்போட்டு விட்டான் சகாதேவன். பக்தனின் பக்தி என்னும் பூவிலங்கை உடைக்கக் கடவுளுக்கே முடியாமல் போனது.

‘கடவுளின் நிறம் வெண்மை’
என்ற நூலில் இருந்து.
ஆசிரியர்: **எஸ்.கே.முருகன்**

நன்றி: **சிக்ஸ்த்சென்ஸ் பப்ளிகேஷன்ஸ்**

நா.கணேசன், ஸ்பேஸ் விஞ்ஞானி, ஹூஸ்டன், அமெரிக்கா



கீழடி அகழாய்வில் கிடைத்திருக்கும் மௌரியர் காலத்திற்கும் முந்தைய முத்திரைக் காசு கங்கை, யமுனை நதிக்கரை நாகரிகத்துக்கும், தமிழகத்துக்குமான உறவுகளைக் காட்டுகிறது. சங்க காலத்தை நிர்ணயிக்கும் ஆற்றல் வாய்ந்ததாக, நாணயவியல் ஆய்வுகளை முனைவர் ரா. கிருஷ்ணமூர்த்தி நிலைநாட்டினார். தொல்லியல் ஆய்வுகள்தாம் ஹெர்மன் டீக்கன் போன்ற ஐரோப்பிய அறிஞர்கள் சங்க இலக்கியம் 8-ம் நூற்றாண்டு வாக்கில் எழுதப்பெற்றன என்ற கருத்தை உடைக்க உதவின. மௌரியருக்கு முன்பாகவே தமிழி எனப்படும் தமிழ் பிராமியின் காலம் எனக் காட்டப் பேரா. கா. ராஜன் கொடுமணல், பொருந்தல் போன்ற கொங்குநாட்டு ஊர்களில் நிகழ்த்திய அகழாய்வுகள் துணை செய்கின்றன. வில்லியம் ஜோன்ஸ் கண்டறிந்த இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பம், சென்னை கலெக்டர் எல்லிஸ் கண்டறிந்த திராவிட மொழிக் குடும்பம் இரண்டுக்கும் உள்ள உறவுகளையும், தொடர்புகளையும் மொழியியல், மரபணு அறிவியல், சிந்துவெளி மற்றும் தமிழகத் தொல்லியல் அகழாய்வுகள் மூலம் ஆராய்கிறோம். தமிழுக்கு எழுத்து மற்றும் புள்ளி உருவான கால நிர்ணயத்திற்கும் தொல்லியல்தான் சான்றுகளைத் தருகிறது.

மௌரியர் காலத்துக்கு முந்தைய முத்திரைக் காசுகள் இரண்டு இப்போது கீழடியில் கிடைத்துள்ளன. நான்காம் கட்ட அகழ்வில், 162 செ.மீ ஆழத்திலும், ஏழாம் கட்ட அகழ்வில் 147 செ.மீ ஆழத்திலும் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. மகத ஜனபதக் காசுகளில் வகைப்படுத்தப்படுபவை





படம் - 1





இக் காசுகள். இவற்றின் காலத்தை கி.மு. நான்காம் நூற்றாண்டின் மத்தியப் பகுதி எனக் கணிக்கலாம். சங்க காலச் சேரர்களின் தலைநகராக விளங்கிய கரூரில் கங்கைச் சமவெளி முத்திரைக் காசுகளைச் அச்சடிக்கும் அச்சுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கரூர், கொடுமணல், கொடைக்கானல், அழகன்குளம், திருநெல்வேலி, போடிநாயக்கனூர், இலந்தக்கரை, வெம்பாவூர், பூம்புகார் போன்ற பல இடங்களில் மௌரியர் கால முத்திரைக் காசுகள் கிடைக்கின்றன.

### கீழடி முத்திரைக் காசில் 'டவுரின்' சின்னம் (Taurine symbol)

ஐரோப்பியக் காளைகளின் பெயரில் ஒரு சின்னம் கீழடியில் தற்போது கிடைத்துள்ள முத்திரைக் காசில் உள்ளது. 'டவுரின்' என்ற பெயரில் அழைப்பார்கள். ஆனால், அப்பெயர் பொருந்துமா? மகத ஜனபத நாணயங்கள் பலவற்றுடன் ஒப்பிடும்போது, 'டவுரின்' சின்னம் நீர்நிலைகள் ஆகிய குளம், ஏரி அருகிலே இருக்கிறது. மேலும், காளை தனியாக அச்சிடப்பட்டுள்ளது. எனவே, இச்சின்னத்தைக் காளை என்று அழைப்பதை விட, 'மகரச் சின்னம்' (Crocodilian symbol) என்பது பொருந்தும் (படம் 1). கிடைமட்டமாக இந்த நீருயிரிகளின் வடிவமைப்பு இருக்கிறது.

மேலும், முதலைகள் எப்பொழுதும் வாயைத் திறந்திருக்கும் இயல்பு உடையவை. திறந்த வாயினைக் காளையின் கொம்பு எனக் கருதி, ஆங்கிலேயர் தங்கள் ஊர்க் காளையின் பெயர் (Taurine) வைத்திருக்கலாம். வேத கால வருணனின் சின்னமாக, மகர விடங்கர் வழிபாடு இருந்துள்ளதைக் கீழடியில் கிடைக்கும் பானை ஓடுகளிலும் காண்கிறோம்.



“

**தொல்லியல் ஆய்வுகள்தாம் ஹெர்மன் டீக்கன் போன்ற ஐரோப்பிய அறிஞர்கள் சங்க இலக்கியம் 8–ம் நூற்றாண்டு வாக்கில் எழுதப்பெற்றன என்ற கருத்தை உடைக்க உதவின.**





இந்த மகரச் சின்னம் அசுவமேத யாகம் செய்த அரசர்கள் வெளியிட்ட பல காசுகளில் இடம் பெறுகிறது. இதனால் ‘பெருவழுதி’ பெயர்பொறித்த நாணயம், ‘மாறன்’ என்ற பெயர் உடைய ஜல்லிக்கட்டுக் காசு, அதியமான் என்று பெயர் எழுதிய காசு, மலையமான் காசு, சேரமன்னர் காசு எனப் பல அரசர்களும், ‘பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி’ போலவே வேள்விகளை ஆதரித்தனர் எனத் தெரிய வருகிறது. மேலும், இந்த மகரச் சின்னம் குதிரை அருகே உள்ள காசுகள் இலங்கையிலும் கிடைக்கின்றன. பௌத்தர்கள் அசுவமேத வேள்வி வேட்கவில்லை.

எனவே, பாண்டியர் அல்லது சோழர்கள் இக் காசுகளை இலங்கையில் வெளியிட்டிருக்கக் கூடும். தொல்காப்பியத்தில் நெய்தல் திணையின் தெய்வம் வருணன் என்பதும் குறிப்பிடத்தக்கது. ‘மழுவாள் நெடியோன்’ என்று வருணனை மதுரைக் காஞ்சி என்னும் சங்க நூல் விவரிக்கிறது.

மோட்டூர், உடையார்நத்தம் போன்ற ஊர்களில் உள்ள சிற்பம் போலவே, உலோகத்தில் கங்கைச் சமவெளியில் ஈமக் குழிகளில் சிற்பங்கள் கிடைத்துள்ளன. ஆங்கில ஹிந்து பத்திரிகையில் திருப்பரங்குன்றத்தில் கிடைத்த தமிழ் பிராமிக் கல்வெட்டு ‘மூ நாக்ர - மூ சக்தி’ வெளியானது. நாக்ர என்றால் வடமொழியில் முதலை. மோட்டூர் மெகாலித்திக் சிற்பம், திருப்பரங்குன்றக் கல்வெட்டு, பாண்டியன் பெருவழுதிக் காசு, கீழடியில் கிடைத்துள்ள மகத ஜனபத முத்திரைக் காசுகளும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டவை. எனவே, கீழடி முத்திரைக் காசில் உள்ள சின்னத்தை, பெருவழுதிக் காசு போலவே, மகரச் சின்னம் என்று புரிந்துகொள்ள வேண்டும். ●

உலகுக்கு ஒளியைத் தரும் சூரியன் தான் நமது இருதயத்தைக் கட்டுப்படுத்துகிறது. நமது இருதயம் வலுவடைய சூரியனை வணங்க வேண்டும். சூரிய நமஸ்காரம் செய்வதனால் இருதய நோய்கள் நீங்குகின்றன. இது நமது முன்னோர் கூறிய சாஸ்திரம். 'ஹ்ருத்ரோகம் மம சூர்யா' என்பது அவர்கள் தந்த வாக்கு.

'சூரியன் என்பது பூமியைப் போன்ற ஒரு கிரகம். அதில் உயிர்கள்கூட இல்லை. அது, தானே சுழல்வதும் பிற கிரகங்களின் சுழற்சியில் கலந்து கொள்வதும் விஞ்ஞானக் கண்டுபிடிப்பு. அப்படி இருக்க சூரியனாவது, நமது இருதய நோய்களைக் குணப்படுத்துவதாவது? என்ன அறியாமை? - இப்படிப் பகுத்தறிவுவாதிகள் கேட்கலாம்.

பகுத்தறிவு ஆராய்ச்சியில் பெயர் பெற்ற ரஷியாவில் லெனின்கிராட் நகரத்தில் உள்ள இருதய நோய் ஆராய்ச்சி நிலையத்தில் பணிபுரிந்தவர் டாக்டர் ரையுகின். அவருக்கு ஓர் ஆராய்ச்சி உணர்வு தோன்றிற்று. சூரியனின் கதிர்களுக்கும், அவற்றின் திறனுக்கும், இருதயப் பாதிப்புக்கும் சம்பந்தம் இருப்பதாக அவருக்குத் தோன்றிற்று.

சூரியனின் இயக்கம் அதிக வீரியத்துடன் இருக்கும் நாள்களில், மருத்துவமனையில் உள்ள இருதய நோயாளிகளின் இருதய நிலையை 'எலெக்ட்ரோ கார்டியோகிராம்' மூலம் பதிவு செய்தார். அவர்களுடைய இருதய நிலை அந்த நாள்களில் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது!

நமது புராதன சாஸ்திரங்களில் மிகச் சிறந்த ஒன்று ஜோதிடக்கலை. அதன் மிகச் சிறந்த ஞானியான வராஹமிஹிரர் நமது நாட்டில் பிறந்தவர். அவர் எழுதி வைத்த ஜோதிட நூல் இப்படிக் கூறுகிறது;

'சூரியனில் கரும்புள்ளிகள் தோன்றினால், உலகத்தில் உள்ள மனிதர்களின் உணர்ச்சிகள் பாதிக்கப்படும். உலகத்தின் இயற்கை நிலை பெரும்பாதிப்புக்கு உள்ளாகும்.'

இன்றைய விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் கூறுவது என்ன?

அமெரிக்காவில் இதுபற்றி ஆராய்ச்சி நடத்தும் R.C.A. Communication Department -ல் பணிபுரிந்த ஜான் நெல்கோ இப்படிக் கூறியுள்ளார்:

'சூரியனில் புள்ளிகள் (Sun Spots) தோன்றும் நேரத்தில் பூமியில் நிலநடுக்கம் ஏற்படுகிறது; வெள்ளம் உண்டாகிறது. பல்வேறு நாடுகளிலும் அந்தச் சமயத்தில், ஸ்ட்ரைக், கிளர்ச்சிகள், கலவரங்கள் ஆகியவை ஏற்பட்டிருக்கின்றன.'

நமது மதத்தின் அடிப்படையான பயிற்சி தியானம். அதை நாம் பிரார்த்தனைக்கு உபயோகப் படுத்துகிறோம். இறைவனை நினைத்து, நல்லவற்றை வேண்டி, தியானம் செய்யும்போது மனம் தெளிவடைகிறது. உடலின் உள்ளே உணர்ச்சிகள் அமைதி காண்பதை உணருகிறோம்.

மேல்நாடுகளில் இன்று அதிகமாக மக்களை பாதித்திருப்பது மனோவியாதி, இவர்களைக் குணப்படுத்து



வதற்குரிய மனநிலை மருத்துவ நிலையங்கள் இன்று அங்கெல்லாம் கணக்கின்றி இருக்கின்றன. மனோதத்துவ நிபுணராக, அறுபது ஆண்டுகளுக்கு மேல் பணிபுரிந்துள்ள பேராசிரியர் கார்ல் சி.ஜங். தன்னுடைய கட்டுரை ஒன்றில்,

“என்னுடைய நீண்ட அனுபவத்தில், கடவுள் நம்பிக்கை கொண்ட, தியானப் பயிற்சியில் ஈடுபாடுள்ள ஆணோ பெண்ணோ, ஒருவர்கூட என்னிடம் மனநோய் மருத்துவத்துக்காக வந்து நான் பார்க்கவில்லை! நீங்கள் எவ்வளவு விதமான, மன அமைதிக்குரிய மாத்திரைகளை உபயோகித்தாலும், தியானத்தில் காணக்கூடிய அபூர்வ அமைதியைப் பெறவே முடியாது!”

‘நிலா வெளிச்சத்தில் படுத்து உறங்கக்கூடாது. அந்த நிலாக்கதிர்கள் பட்டால் பைத்தியம் பிடிக்கும்’- இப்படிச் சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம். நிலா வெளிச்சத்தில் படுத்துக்கொள்வது குளிர்ச்சிதானே? அதனால் எப்படிச் சித்தம் பாதிக்கப்பட முடியும்? – இப்படி ஒரு சந்தேகம் நமக்கு எழலாம்.

சித்தசுவாதீனம் இல்லாதவர்களைக் குணப்படுத்தும் நமது சித்தவைத்தியர்கள், அமாவாசை நாளிலும் பௌர்ணமி நாளிலும் மிக ஜாக்கிரதையாக இருப்பார்கள். அப்போது அந்தக் கலக்கத்தின் வேகம் அதிகம்.

சந்திரனுக்கு மனிதன் செல்லும் இந்தக் காலத்தில் இப்படிச் சொல்வது எவ்வளவு அறிவீனம் என்று சிலர் கேட்கலாம்.

ஆனால், இன்றைய மருத்துவ விஞ்ஞானம் என்ன சொல்லுகிறது?

பென்சில்வேனியா மாநிலத்தில் ராவிட்ஸ் என்ற அமெரிக்க மனோதத்துவ டாக்டர் ஆராய்ச்சி நடத்தினார். எப்படி? மனநோய் உள்ள நோயாளிகளின் மூளைகளின் பிரதிபலிப்பு மின்னணு அலைகளாகப் பதிவு செய்யப்பட்டன. ஒவ்வொரு நாளும் அந்த அலைவடிவம் படமெடுக்கப்பட்டது. அந்த அலைகளின் உச்ச அளவு தாறு மாறாகப் பதிவானது எப்போது தெரியுமா? அமாவாசையன்றும் பௌர்ணமியன்றும்! ‘மனநோய் உள்ளவர்களைச் சந்திரனின் சஞ்சாரம் நிச்சயமாகப் பாதிக்கிறது!’ என்று தன் ஆராய்ச்சியின் முடிவைக் கூறுகிறார் டாக்டர் ராவிட்ஸ்.

உடல் கூற்றைப் பற்றி மருத்துவக்கலை என்ன சொல்லுகிறது?

‘நமது உடம்பில் ஒரு லட்சம் கோடி அணுக்கள் இருக்கின்றன. அவை நமது ஆயுளில் அழிந்து மீண்டும் பிறந்தும், உருமாறியும் இயங்குகின்றன. நமது உடலின் உயிர்ப்புக்கு அவைதான் மூலாதாரம். ஆனால், அவற்றை நாம் காண முடியாது. அதன் அளவும் எல்லையும் நாம் உணரக்கூடியவற்றைக் கடந்தவை. அந்த அணுக்களுக்குப் பார்வை இல்லை. ஆனால், அவையே நம்மைப் பார்க்க வைக்கின்றன. அவற்றுக்கு உணர்வு இல்லை. ஆனால், அவைதாம் நமது உணர்ச்சிக்கு அடித்தளமாக அமைகின்றன!’

மனோதத்துவ நிபுணர்கள் இப்படிக் கூறுகிறார்கள்;

’உங்களுடைய மூளையில் எண்ணற்ற பிம்பங்கள் இருக்கின்றன. மிகச் சாதாரண விஷயத்திலிருந்து மிகப்பெரிய விஷயம் வரையில் அவற்றிலிருந்து நீங்கள் தேடிக் கண்டுபிடிக்கலாம். உங்கள் வெற்றி. இப்படிக் கலக்கமற்ற ஆழ்ந்த சிந்தனையின் மூலம் சரியான விஷயத்தை அறிந்து அடையாளம் கண்டுகொள்வதில்தான் இருக்கிறது!’ ●

“

உங்களுடைய மூளையில் எண்ணற்ற பிம்பங்கள் இருக்கின்றன. மிகச் சாதாரண விஷயத்திலிருந்து மிகப்பெரிய விஷயம் வரையில் அவற்றிலிருந்து நீங்கள் தேடிக் கண்டுபிடிக்கலாம். உங்கள் வெற்றி. இப்படிக் கலக்கமற்ற ஆழ்ந்த சிந்தனையின் மூலம் சரியான விஷயத்தை அறிந்து அடையாளம் கண்டுகொள்வதில்தான் இருக்கிறது!’

ஆண்டவன் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தைத் தேடி பக்தர்கள் தானே செல்வார்கள்? ஆனால், இறைவனே ஆண்டுக்கு ஒருமுறை குறிப்பிட்ட ஒரு வீட்டுக்கு – வீடு என்று சொல்வதை விடவும் மாளிகை அதுவும் திருமகள் அருள் பொலியும் திருமாளிகைக்குச் செல்லும் அதிசயத்தைக் காணவேண்டும் என்றால், நாம் ஆண்டாளின் ஜன்மபூமியான திருவில்லிபுத்தூருக்குச் செல்ல வேண்டும்.

மார்கழி மாதம்.

பகல் பத்துக்கு முதல்நாள், 'திருப் பல்லாண்டு' வைபவம் தொடங்கும் நாள்.

அன்று பகவானும் – நாச்சியாரும் ஆலயத்திலிருந்து புறப்பட்டு ஒரு மாளிகைக்கு வருகிறார்கள். அந்த மாளிகையின் வாசலில் மாளிகையைப் பார்த்தபடி பகவானும் – நாச்சியாரும் நிற்கிறார்கள். அங்கே அவர்களுடைய திருக்கண் பார்வைக்காக 'பச்சை பரத்தி' என்ற பெயரில் காய்கறிகள், தானியங்கள் பரப்பி வைக்கப்பட்டிருக்கிறது.

எதற்காக இப்படி ஒரு வைபவம்? இதன் தாத்பர்யம்தான் என்ன?

அந்தப் பச்சை காய்கறிகள், அந்த வீட்டில் 'பிறந்த' பெண்ணுக்குத் தரும் தாய்வீட்டுச் சீதனமாம்.

ஆம்; அங்கு எழுந்தருளியிருக்கும் நாச்சியார், அந்த வீட்டில் பிறந்த பெண்!

பச்சைக் காய்கறிகளும் தானியங்களும் மட்டுமல்லாமல், அந்த வீட்டு நந்தவனத்தில் தோன்றிய அந்த தெய்வப் பெண்ணுக்குத் திரட்டுப்பாலும், சர்க்கரைப் பாகுடன் பொரி கடலை சேர்த்துச் செய்த மணிபருப்பும் நைவேத்தியமாகச் சமர்ப்பிக்கப்படுகிறது.

பிறந்தவீட்டு மரியாதைகளைப் பெற்று தம் ஆலயத்துக்கு எழுந்தருளுவார் அந்தத் தெய்வப் பெண்ணும், அவருடைய நாயகனான பெருமாளும்.

இதேபோல் திருக்கல்யாணத்தின் போதும், இந்த வீட்டிலிருந்து, அந்த 'பெண்'ணின் தந்தையான 'பெரியாழ்வார்' (இப்போதுள்ள பெரியாழ்வாரின் வாரிசு, பெரியாழ்வாராகத் தன்னை பாவித்துக் கொண்டு) ஆலயத்துக்குப் புறப்பட்டுச் சென்று – ஆலயத்தில் பெருமாள் 'பரதேசம்' அதாவது காசி யாத்திரை செல்லவிருப்பதைத் தடுத்து – தம் மகளை பெருமாளுக்குத் திருக்கல்யாணம் செய்து வைப்பார்!

ஆம்; இன்றும் அவர் வாக்காக (ஸ்தானிகம் வாய் மொழியில்) – 'செண்ட லங்கார மன்னனாகிய ரங்கமன்னாருக்கு, கோதை சூடிக் கொடுத்த நாச்சியாரை கன்யாபிரதானம் செய்வதாய் பெரியாழ்வார் எழுந்தருளியிருக்கிறார்' என்று கூற –

பெருமாள் அந்தப் பெண்ணை ஏற்றுக் கொண்டதை – 'திருவுளம் பற்றி திருவுள மாக்கினார்!' என்று அறிவிக்கிறார்கள்!

இந்த விண்ணுலகத்துப் பெருமாளுக் கும் மண்ணுலகில் திருமண பந்தத்தை உருவாக்கிய, அந்த நாச்சியார் வேறு யார்? ஸ்ரீவில்லிபுத்தூர் தலத்தில் அவதரித்த ஆண்டாள் என்னும் கோதை நாச்சியார்தான்!

துவாபரயுகத்தில் அன்பால் கண்ணனை அடக்கி ஆண்டாள் ஒரு ராதை.

கலியுகத்தில் அதேபோன்ற அன்பால் பகவானைக் கட்டுப்படுத்தி ஆண்டாள் ஒரு கோதை... அப்படிக் கண்ணனை ஆண்டதால் 'ஆண்டாள்' எனும் பெயரைப் பெற்றாள்!

கண்ணனை அவள் தனக்குள் அடக்கியாள கைக்கொண்ட ஆயுதம்தான் காதல்!

அந்தக் காதல், மாயை நிரம்பியோருக்குச் சிற்றின்பம்! மாயை விலகியோருக்குப் பேரின்பம்! ஆண்டாள் கொண்ட காதலோ சிற்றின்பம் - பேரின்பம் எல்லாவற்றையும் கடந்த தெய்விக இன்பம்...

அந்தக் காதலில் பெற்ற வெற்றியை இந்த வையகமே - அதோ, அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் திவ்யதேசத்தில் நித்தம் நித்தம் கொண்டாடி மகிழ்கிறது. பொழுது புலரும் வேளையில் புள்ளினங்கள் முதல் புவன இயக்கங்கள் யாவுமே மயங்கிக் கேட்கும்படி பெருமாளை நோக்கி -

**ஆனிரை மேய்க்க நீ போதி அருமருந்து ஆவது அறியாய்**
**கானகம் எல்லாம் திரிந்து உன் கரிய திருமேனி வாட**
**பானையில் பாலைப் பருகிப் பற்றாதார் எல்லாம் சிரிப்ப**
**தேனில் இனிய பிரானே. செண்பகப்பூச் சூட்ட வாராய்**

-என்பன போன்ற பல பாமாலைகளைப் பாடிப் பரவி பெரியாழ்வார் இறைவனுக்குத் தொடுத்த மாலைகளில் மணம் கமழ்ந்தது. அந்த மணம் பெருமாளை மகிழ்வித்தது; அப்பெரும் பதியையே பக்தியால் குளிர்வித்தது.

திடீரென்று ஒருநாள் அந்த மணத்தில் ஒரு புதுமை கலந்தது. அன்றலர்ந்த பூமணத்துடன் ஓர் நங்கையின் தோள் மணமும் கலந்தது! பெரியாழ்வாரின் தவப்புதல்வி கோதை ரகசியமாகச் சூட்டி மகிழ்ந்து, பின் அதைக் கழற்றி பெருமாளுக்கு அனுப்பியதால் ஏற்பட்ட மணம் அது. அந்த மணத்தில் இருந்த நங்கையின் தெய்விகப் பற்றில் மாதவன் கட்டுண்டு போனான்... அந்த மணம் நாரணனை மயக்கி அவனை அவளுக்குள் அடங்கச் செய்தது. அப்படி மாலையைச் சூடிக் கொடுத்துத்தான் அந்த நங்கை நாயகனான பகவானை வெற்றி கொண்டாள்.

ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்யதேசத்தில் அடியெடுத்து வைக்கும்போதே நம் மன மெல்லாம் பரவசத்தில் பூரித்துத் திளைக்கிறது.

அந்தத் தலத்தில் நடந்த மகிமை... அம்மம்மா...! உலகத்தவர்களைக் காத்திடவும் அவர்தம் ஆன்மாக்களைக் கடைத்தேற்றவும் பகவான் எடுத்த அவதாரங்கள் பத்து;

அவனுடைய அருளமுத சாகரத்தில் மூழ்கித் திளைத்து, உலகத்தவர்க்கு ஆன்மநெறி காட்டி அருளிய ஆழ்வார்கள் பன்னிருவர்; பரந்தாமனுடைய திவ்யதேசங்களோ நூற்றியெட்டு; அவனுடைய புகழினைப் போற்றிப் பாடும் பாசுரங்களோ நாலாயிரம்;

> மற்றவர்கள் பெருமாளை, 'வேதமே! வித்தகப் பெருமாளே...' என்று பணிந்து வேண்டிக் கொண்டிருந்தால், பெரியாழ்வார் மாத்திரம், 'கண்ணே, என் மைந்தா... மழை முகில் செல்வா...' என்று பிள்ளைப்பாசம் கனிய, பகவானைப் பிள்ளையாக மாற்றி அழைக்கும் 'வாத்ஸல்ய பக்தி' கொண்டவர்.

ஆனால், அப்பெருமானை அன்பினால் - அளப்பரிய காதலினால் ஆண்டிட இந்த யுகத்தில் அவதரித்த கோதை நாச்சியாரோ ஒரே ஒருவர்தான்!

ஆம்! மறைகளின்படி எம்பெருமானின் பக்கலில் உறையும் தேவியர் மூவர். ஸ்ரீதேவி - பூதேவி - நீளாதேவி.

இந்த மூவரும் ஒருருவில் இணைந்து ஆண்டாளாக அருட்சேவை சாதித்தது, இதோ இந்த ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்யதேசத்தில்தான்...

ஆம்; மூன்று தேவியரும் ஆண்டாள் ஒருவர் உருவில் எழுந்தருளியிருப்பதற்கு, பெருமாளின் பிரசன்ன தரிசனமே ஒரு சாட்சி!

யுகங்கள் நான்கிலும் காணாத அற்புதம், இந்தத் தலத்தில் நடந்திருக்கும் மகிமை.

எந்தப் பதியில் பெருமாள் தம்பதி சமேதரராக எழுந்தருளினாலும், ஸ்ரீதேவியும் - பூதேவியும் அருகிலிருப்பார்கள். இந்தத் தலத்தில்தான் ஆண்டாள் ஒருவரோடு மட்டும் காட்சி தருகிறார். பெருமாளுக்கு வலப்புறம் ஆண்டாள் நாச்சியார். இடப்புறம் பெரிய திருவடியான கருடாழ்வார்.



இப்படி ஓர் அற்புதத் திருக்கோலம் எந்தத் தலத்திலும் காணாத புதுக்கோலம்.

ஆம்! தேவியர்கள் அங்கே ஆண்டாள் என்னும் ஒருருவில் இணைந்துவிட்டனர்.

கண்ணனாக அவதரித்து வேதத்தை கீதையாக அருளினான் பெருமான். அவனே அருளிய அந்த வேதத்துக்கும் கூட ஆதியாக ஒரு வித்து இருக்கிறதாம்!

ஆம்! 'வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதைத் தமிழ்!' என்று அருளியிருக்கிறார் வேதபிரான் பட்டர்!

பகவான் வழங்கிய வேதத்துக்கும் வித்து ஆண்டாளின் பாசுரங்கள் என்றால், அந்தத் திருவுடை நாச்சியாரின் பெருமை பேசவும் எளிதோ?

காட்சிக்கு அரும்பொருளாய், வேதத்துக்குக் கருப்பொருளாய் – பிராட்டியார் அவதரித்த திருத் தலத்தில், உள்ளத்தால் கசிந்துருகி, நாச்சியார் சந்நிதியை நோக்கி விரைகிறோம்...

நாம் சென்றது மார்கழி மாதத்து அதிகாலைப் பொழுது... அந்தப் பொழுதில்தான் நாச்சியாரின் விசுவரூப தரிசனம் காணும் பேறு நமக்குக் கிடைக்கும்.

பிராட்டியின் சந்நிதிக்குத் திருமஞ்சன நீர் சென்றதும், திருக்கதவைத் திறக்கிறார் ஒரு ஸ்தானிக பட்டர். பக்தர்கள் சூழ்ந்து நிற்கின்றனர். ஒருபுறத்திலிருந்து காராம்பசு வருகிறது.

பிராட்டியான ஆண்டாள் கண்மலர்ந்து விசுவரூப தரிசனம் தருவதை சேவிக்கவே பக்தர் கூட்டமும் – பணிபுரியும் தீர்த்தக்காரர் கூட்டமும்... பசு வருகிறது. திரை விலகுகிறது. தேஜோமயமாக தேவியின் திவ்ய விசுவரூப தரிசனம் கண்டு சேவித்து நிற்கிறோம்.

பிராட்டியின் திருப்பார்வை கடாட்சத்துக்காக எதிரே காராம்பசு பின்புறமாக நிற்கிறது. தேவி காராம்பசுவைப் பார்த்துக் கண்விழிப்பதாக ஐதிகம். தட்டொளி என்னும் கண்ணாடியும் எதிரே பொருத்தப்பட்டிருக்கிறது.

கண்ணாடியிலும் – காராம்பசுவின் முகத்திலும் கண்விழிப்பது லட்சுமிகரமானது என்பது மனித நம்பிக்கை. லட்சுமி அம்சமான நாச்சியாரையே அவற்றின் பார்வையில் திருப்பள்ளியெழுச்சி செய்ய வைத்திருப்பதில் பக்தர்களுக்குத் திருப்தி.

பிராட்டிக்கு தீபாராதனை ஆகிறது. தீர்த்தக்காரர்கள் பாசுரங்களைச் சாற்றுகின்றனர். அதைத் தொடர்ந்து அந்த மகிமை நிகழ்கிறது.

பிராட்டிக்கு முன்னிரவில் அணிவித்த மாலையை பக்தி சிரத்தையுடன் ஸ்தானிக பட்டர்கள் கழற்றி எடுத்து, அதைப் பெருமாள் சந்நிதிக்கு எடுத்துச் செல்கிறார்கள்...

நாச்சியார் சந்நிதிக்கு இடதுபுறமாக அமைந்துள்ள சந்நிதியில் வடபத்ரசாயி பெருமாள், ஆண்டாள் நாச்சியார் இரவில் சூடிக்கொண்டு இப்போது களைந்து

கொடுத்தனுப்பும் மாலைக்காகக் காத்திருக்கிறார். தேவியின் மாலை சென்ற பிறகுதான் பெருமாளின் விசுவரூப தரிசனம் தொடங்கும். ஆம்! பிராட்டி சூடிக்கொடுத்த மாலையை அணிந்த பிறகுதான் பெருமாள் கண்விழித்து திருப்பள்ளியெழுந்து காட்சியளிப்பார்.

அந்த வைபவம், இத்தலத்தில் நடந்த அற்புத வரலாற்றின் நடைமுறைக் கொண்டாட்டமே... அது வேதகாலத்தில் நடைபெற்றதல்ல... காலத்தை நிர்ணயிக்க முடியாத இதிகாச காலத்தில் நிகழ்ந்ததுமல்ல...

இந்தக் கலியுகத்தில் சில நூறு ஆண்டுகளுக்கு முன்புதான் - பொ.ஆ. ஒன்பதாம் நூற்றாண்டில் தான் - நடந்த அற்புதம்...

அந்த வைபவம்...

அதோ...! எங்கு பார்த்தாலும் மலர்கள்... மலர்கள்... செண்பகம், மல்லிகை, பாதிரிப்பூ, மருவு, செங்கழுநீர், குருக்கத்திப்பூ, இருவாட்சி.

இவற்றைத் தொடுத்துப் பெருமாளுக்கு சூட்டிக் கொண்டிருக்கின்றன இரு புனிதக் கரங்கள். வேதியர் குலத்துதித்து, விஷ்ணுசித்தன் என்ற பெயர் கொண்டு - தொண்டுக்கே ஆளாகிய பெரியாழ்வாரின் பக்திக் கரங்கள்தான் அவை! அவர் ஆழ்வார்களுள் எல்லாம் பெரியவர்... அதனால், பெரியாழ்வார் எனும் பெயர் பெற்றவர்.

மற்றவர்கள் பெருமாளை, 'வேதமே! வித்தகப் பெருமாளே...' என்று பணிந்து வேண்டிக் கொண்டிருந்தால், பெரியாழ்வார் மாத்திரம், 'கண்ணே, என் மைந்தா... மழை முகில் செல்வா...' என்று பிள்ளைப்பாசம் கனிய, பகவானைப் பிள்ளையாக மாற்றி அழைக்கும் 'வாத்ஸல்ய பக்தி' கொண்டவர்.



அவர் தன்னை யசோதையாகவும், தம் இல்லத்தை நந்தகோபன் அரண்மனையாகவும், தான் வாழ்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர் நகரை கண்ணன் வளர்ந்த கோகுலமாகவும் - தன் நினைவு பாவனையில் அமைத்துக் கொண்டு பெருமாளைச் சீராட்டிச் சேவிப்பவர்... அவர் தன் கற்பனை பாவனையில் கண்ணனை, 'மைந்தா வருக...' என்று அழைத்து அவனைத் தன் கரத்தில் ஏற்றி நிலா காட்டி, பொற்கிண்ணத்திலிட்ட அக்காரவடிசிலை ஊட்டுவார்... காலில் கிடத்தித் திருமஞ்சன நீராட்டுவார்... ஐயோ! இந்தச் சேட்டை செய்யும் பிள்ளையை எப்படித் திருத்துவேன்?' என்று செல்லமாய்க் கோபித்து மயங்குவார்...

இப்படி இறைவனையே குழந்தையாக்கிப் பூஜிக்கும் தகுதி அவர் ஒருவருக்குத்தான் உடையதாக இருந்தது.

அதனால்தான் அவர் பெரியாழ்வார்!

ஒருமுறை - அவர் காலத்தில் மதுரையை ஆண்ட வல்லபதேவன் அரசவைக்கு, பெருமாளின் கட்டளைப்படிச் சென்று, அங்கே நடந்த வாதப் போட்டியில் 'ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள்' என்று வாதித்து நிலைநாட்டி, அந்த வாதப் போருக்குப் பரிசாகக் கிடைத்த பொற்கிழியையும் கைக்கொண்டு வரும்போது, அவருக்கு எம்பெருமான் ஸ்ரீதேவி சமேதராகக் காட்சி அளித்தார்.

அந்தக் காட்சியைக் கண்ட பெரியாழ்வார், இறைவனை நோக்கி வணங்கவில்லை. அதற்குப் பதிலாக இறைவனுக்குப் பல்லாண்டு பாடினார்... பெரியோர்கள் தம்மை வணங்கும் இளையோருக்குத்தான் 'பல்லாண்டு' என்று ஆசி வழங்குவது வழக்கம்.

ஆனால், மனிதப் பிறவி கொண்ட பெரியாழ்வாரோ, பரமசொரூபனான மதுசூதனனுக்கே பல்லாண்டு பாடினார்!

இப்படி இறைவனுக்கே பல்லாண்டு பாடிய பெரும் நிலை அவருக்கு எப்படிச் சித்தித்தது, அவருக்கு மட்டும் ஏன் அந்தச் சிறப்புத் தகுதி...? இந்த மர்மம் ஓர் ஆடி மாதம் பூர நட்சத்திரத்தில் புலனாகிறது.

அன்று பெரியாழ்வார் நந்தவனத்தில்




திருப்பணி செய்து கொண்டிருக்கும் அந்த அதிகாலைப் பொழுதில் திடீரென்று ஒரு பேரொளி.

பகவானின் பச்சைமாமேனிபோல், படர்ந்திருந்த திருத்துழாய் செடிப் படுகையின் மத்தியில், கோடிசூரியப் பிரகாசத்துடன் ஒரு பெண் குழந்தை – அங்குத் தோன்றும்போதே ஐந்து வயதுப் பிராயத்துடன் படுத்திருக்கிறது.

அந்தக் காட்சியைக் கண்டு பெரியாழ்வார் திகைத்து நின்றார். அப்போது அந்தக் குழந்தை சிரித்து, ‘தந்தையே, நான் உமது மகள்... இந்தத் துளசிச் செடிதான் என் தாய்!’ என்று கூறிவிட்டு, ஐந்து வயதுக் குழந்தையாக இருந்த பெண் குழந்தை திடீரென்று கைக்குழந்தையாக மாறிவிட்டது! இந்த அற்புதத்தைக் கண்டு திகைத்த பெரியாழ்வார் குழந்தையைக் கரத்தில் ஏந்தி, தாம் வழிபடும் வடபெருங் கோயிலுடையான் சந்நிதிக்கு எடுத்துச் சென்று கிடத்தி, பெருமாளை வணங்கி நின்றார். அச்சமயம், ’இக் குழந்தையை நீரே வளர்ப்பீர்!’ என்று தெய்வ வாக்கு பிறக்கிறது.

குழந்தையை எடுத்துச் சென்று ‘கோதை’ என்று பெயரிட்டு வளர்த்தார் ஆழ்வார்...

இக்கலியுகத்தில் பெரியாழ்வாரின் கையில் கோதையாகத் தவழ்ந்த இந்தக் குழந்தைதான் திரேதாயுகத்தில் சீதையாக ஜனகன் கையில் தவழ்ந்தது... ராதையாக ஆயர்பாடியில் தோன்றி வளர்ந்தவளும், இவளே!

ஆம்! பிராட்டியைக் குழந்தையாகப் பெற்று, வளர்க்கும் பேறு பெற்ற பெருமைதான், பரம்பொருளான பெருமாளுக்கே ‘பல்லாண்டு’ பாடும் தகுதியை விஷ்ணுசித்தரான பெரியாழ்வாருக்கு உருவாக்கி வைத்திருந்தது.

ஆழ்வாரின் பெருமையை உலகுக்கு உணர்த்த அப்படி கருவில் அடங்காத உருவாக அவதரித்த பிராட்டி, அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் தலத்தைப் பெருமைப்படுத்த தன் அடுத்த மகிமையையும் நிகழ்த்தத் தொடங்கினாள்...

ஆம்! அதை விளக்கிச் சொல்கிறது ஒரு

“

அவள் கரங்கள் எதிரே இருந்த மாலையை எடுக்கின்றன. 'தானே கண்ணன்' என்று கண்ணனோடு மனத்தால் ஒன்றிய கோதையின் கரங்கள், கண்ணனின் கரங்களாகவே மாறி தன் கழுத்திலேயே மாலையைச் சூட்டுகின்றன!

வரலாறு.

அதாவது, 'ஸ்ரீரங்கநாதர் கோயில் கொண்டுள்ள திருவரங்கத்தையே பூலோக வைகுண்டம் என்று ஆழ்வாராதிகளும், ஆசார்யர்களும் போற்றி வந்திருக்கின்றனர். அந்த சீர் உலாவும் திருவரங்கத்தில் நித்யவாசம் செய்யும் 'அ' காரவாச்யனான அழகிய மணவாளன், அங்கிருந்து எழுந்தருளி, 'உ'கார வாச்யையான கோதை நாச்சியாருடன் சேதன சொரூபம் - 'ம'காரவாச்யருமான பெரியதிருவடியுடனும் காட்சி தந்து, உயிர்கள் அனைத்துக்கும் வேண்டிய வரங்களைத் தந்தருளும் பொருட்டு செங்கோல் தரித்த திருக்கையுடன் நித்ய மணவாளராக சாந்நித்யம் செய்தருளிய மையாலே, திருவரங்கத்தைக் காட்டிலும் ஸ்ரீவில்லிபுத்தூரே சிறப்புற்றது...' என்று அந்த தலக்குறிப்பில் கூறப்பட்டிருக்கிறது.

இந்தப் பெருமையை ஸ்ரீவில்லிபுத்தூர் அடைய அங்கே நடந்த அற்புதம்தான் என்ன...?

அதோ...

பெரியாழ்வார் இல்லத்தில் தூண்டாமணி விளக்கு சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. நாள் முழுவதும் நந்தவனத்தில் நின்று பூமாலை தொடுத்து, எடுத்துச் சென்று அதைப் பாமாலையுடன் பெருமாளுக்குச் சாத்தி மகிழ்ந்திருந்தும்கூட, நள்ளிரவு ஆகியும் அயர்ந்து தூங்க முடியவில்லை ஆழ்வார் பெருமானான விஷ்ணுசித்தருக்கு. அவர் நாவிலும் - சிந்தையிலும் நாராயணனே கொலு வீற்றிருக்கிறான். விளக்கு ஒளியில் ஏடு ஏடுகளாகப் பிரபந்தங்களை யாத்து இசைத்துக் கொண்டிருக்கிறார் அவர்.

அவருடைய இசையில், தேமதுரத் திவ்யபிரபந்தங்களில் ஆயர்பாடிக் கண்ணன் ஆடிவிளையாடிக் கொண்டிருக்கிறான்! நேரமாகிக் கொண்டே இருக்கிறது. அவர் மெல்ல மெல்ல மறுநாள் விழிப்பதற்காக நாராயண ஸ்மரனையுடன் துயில் கொள்கிறார்.

அப்போதும் தூங்காமல் இருமலர் விழிகள் அவரருகே விழித்துக் கொண்டிருக்கின்றன!



ஆம், கோதைதான் அது!

அரங்கனைப் பற்றி பெரியாழ்வார் பாடப்பாட ஆயர்பாடி ராதையாகவே தன்னை மனத்தால் வரித்துக்கொண்டு, கண்ணனின் கள்ளத்தனத்தில் - பிள்ளை விளையாட்டில் உள்ளத்தைப் பறிகொடுத்து, பேரின்ப ஈர்ப்பில் சிக்குண்டவளாக மயங்கி நிற்கிறாள் கோதை. அவள் நினைவெல்லாம் கண்ணன்... உணர்வெல்லாம் கண்ணன்... காணுமிடமெல்லாம் கோகுலம்... பிருந்தாவனம்... ஆயர்குலச் சிறுமியர்...!

விடிகிறது. 'சிற்றாடை புனைந்து, சிற்றில் அமைத்து விளையாட அவள் தோழியர் வருகின்றனர்... சின்னஞ்சிறு அல்லிமலர்க் கரங்களால் சிறுவீடு கட்டி விளையாடுகிறார்கள். அச்சிறுமியரில் ஒரு குறும்புக்காரத் தோழி ஒரு சிற்றிலை சிதைக்கிறாள். கோதையின் பார்வையில் அந்தத் தோழியின் உருவம் தெரியவில்லை. கம்சனைக் காலால் எட்டி

உதைத்த கண்ணனின் செங்கமலர்ச் சீர்ப்பாதங்களே அந்த சிற்றிலையும் சிதைப்பதாகத் தோன்றுகிறது.

பொய்க்கோபம் கொண்டு, ‘நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணா, கள்ள மாதவா, கேசவா, செங்கண் மாலே, செய்யத் தாமரைக் கண்ணனே, எங்கள் சிற்றிலை வந்து சிதைக்காதே!’ என்று சிணுங்குகிறாள்... தோழியர் ஏதும் புரியாமல் விழிக்கின்றனர்.

ஆட்டம் முடிகிறது... தோழியர்களுடன் நீராடச் செல்கிறாள் கோதை. ஆடை களைந்து திருமுக்குளத்துக்குள் இறங்குகிறாள். உடனே அவள் கண்முன் ஸ்ரீவில்லிபுத்தூர் திருமுக்குளம் யமுனை நதி தீரமாக மாறுகிறது. குளக்கரையிலிருக்கும் ஆடைகளை அந்த மாயக் கண்ணன் எடுத்து மரக்கிளையில் ஒளித்து வைப்பதுபோல் பிரமை...

‘மாயவா, மதுசூதனா, இது என்ன விளையாட்டு! நீ குரங்குகளுக்கு அரசன் என்பதால் அந்த குணத்தைக் காட்டுகிறாயா, என்ன! ஆடைகளைத் தரமாட்டாயா? உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. உன்னை இப்படித் திரிய விட்டிருக்கும் உன் அன்னை யசோதையைச் சொல்ல வேண்டும்! வஞ்சகப் பேய்ச்சியின் பாலுண்டாயல்லவா? அதனால்தான் அவ்வளவு அழுத்தமாக இருக்கிறாய்...! ஐயோ மாதவா... எங்கள் மானம் போகிறதே... தோழியரும் நானும் தொழுகிறோம்... இனி யென்றும் பொய்கைக்கு வரமாட்டோம்!’ என்று நீரினுள் நின்று இறைஞ்சுகிறாள்... பாடுகிறாள்.

பக்கத்தில் நீராடிக் கொண்டிருக்கும் தோழியர் பரக்கப் பரக்க விழிக்கின்றனர். அவர்கள் கண்ணுக்கு எதுவும் தெரியவில்லை. எப்படித் தெரியும்? பரமனைப் பார்க்கும் பரிபக்குவம் எல்லோருக்கும் வந்துவிட்டிருந்தால், எல்லாருமே கோதையாகியிருப்பார்களே...!

நாளாக நாளாக நாரணன் நம்பியின் நினைவில் நங்கை கோதை உருகுகிறாள். முதலில் பார்க்கும் இடமெங்கும் பரந்தாமனைக் கண்ட கோதையின் மனோபாவத்தில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டு விட்டது... கண்ணன் எதிரே இல்லை; தனக்குள்ளே அடங்கி விட்டான்; தன்னோடு கலந்துவிட்டான் என்ற ஐக்கியபாவம் அவள் உள்ளத்துள் நிறைந்துவிட்டது.

‘நான் கண்ணனுக்கு உரியவள்... கண்ணன் எனக்கு உரியவன்: அதனால் கண்ணனுக்கு உரிய பொருள்கள் எல்லாவற்றிலும் எனக்கு உரிமை உண்டு.’ - இப்படி ஓர் எண்ணம் கோதையை ஆட்கொள்கிறது.

அப்போது அவள் பார்வையில், பெரியாழ்வார் இறைவனுக்காகத் தொடுத்து வைத்திருந்த புத்தம் புது மாலை படுகிறது. அந்த மாலையைப் பார்த்து மயங்கி நிற்கிறாள். பின் அந்த மாலை கண்ணனின் தடந்தோளை அலங்கரிக்கும் அற்புதக் காட்சியை மனத்தால் நினைத்துப் பார்க்கிறாள்... அன்றலர்ந்த மலர்மாலையை, அரங்கமாநகருளான் அணிந்து, செம்பவளவாய் மின்னச் சிரித்து நிற்கும் திருக்கோலம் அவள் நெஞ்சில் தோன்றுகிறது. அந்த அழகில் சொக்கி நிற்கிறாள்.

திடீரென்று அவள் மனதில் ஒரு புதிய பிரமை. இப்போது கண்ணன் தன் தோளில் இருந்த மாலையைக் கழற்றுகிறான். மாலை அவள் கையிலிருக்கிறது. மாலையும் கையுமாக மாதவன் கள்ளச் சிரிப்புச் சிரிக்கிறான். ‘மாலே, மாயவா, மாலையை யார் கழுத்தில் சூடப் போகிறாய்?’ என்று பரிதவிக்கிறாள் கோதை. ‘கோதாய், உன் கோலத் திருக்கழுத்தில் சூடுகிறேன்’ என்று கண்ணன் அவள் கழுத்திலேயே மாலையைச் சூட்டிவிடுகிறான்...! ஆனந்தப் பரவசத்தில் திளைக்கிறாள் கோதை. அவள் பிரமை கலையவில்லை. கண்ணன் அந்த மாலையைத் தன் கழுத்திலேயே சூட்டிவிட்டான் என்ற நினைவில் எழுந்த பேரானந்தப் பிரமை நிலையில் பித்தாகி நிற்கிறாள் கோதை.

அவள் எண்ணத்தின் பிரதிபலிப்பாக அவள் ஐம்புலன்கள் இயங்குகின்றன. அவள் கரங்கள் எதிரே இருந்த மாலையை எடுக்கின்றன. 'தானே கண்ணன்' என்று கண்ணனோடு மனத்தால் ஒன்றிய கோதையின் கரங்கள், கண்ணனின் கரங்களாகவே மாறி தன்கழுத்திலேயே மாலையைச் சூட்டுகின்றன!

அந்த மாலையோடு நந்தவனத்தில் உள்ள கிணற்றடிக்கு ஒடுகிறாள். கிணற்று நீரில் சூடிய மாலையுடன் அழகு பார்க்கிறாள். அங்கே ஒரு கணம் தன்னுருவைக் காண்கிறாள்... மறுகணம் மாலையணிந்த மாதவனின் தோற்றத்தைத் தன்னில் காணுகிறாள். மனம் துள்ள மகிழ்ச்சியால் கூத்தாடுகிறாள் கோதை.

திடீரென்று பெரியாழ்வாரின் குரல்...

**- அடுத்த இதழில்**

மீனாட்சி ரவிகுமார்

# பெண்களின் சபரிமலை

## – சக்குளத்துக்காவு பகவதி




பெண்களின் சபரிமலை என்ற பெருமைக்கு உரியது சக்குளத்துக்காவு பகவதி அம்மன் கோயில். பம்பை ஆறும் மணிமலை ஆறும் இருபுறங்களிலும் மாலையின் இரு பிரிவுகளாகத் தவழ்ந்து செல்லும் இயற்கை எழில் சூழ்ந்த பின்னணியில் அமைந்திருக்கிறது சக்குளத்துக்காவு பகவதி அம்மன் கோயில்.

சுமார் ஐயாயிரம் வருடங்களுக்கு முன்பு நாரத முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகச் சொல்லப்படும் இந்தக் கோயிலின் தலவரலாறு...

தற்போது ஆலயம் அமைந்திருக்கும் பகுதி முற்காலத்தில் அடர்ந்த வனப்பகுதியாக இருந்தது. ஒருநாள் வேடன் ஒருவன் தன் மனைவியுடன் வேட்டைக்குச் சென்றான். அப்போது அவன் எதிரில் ஒரு நாகம் சீறிக்கொண்டு வந்தது. அது எங்கே தன்னைக் கடித்துவிடுமோ என்று பயந்த வேடன், அந்தப் பாம்பைத் தன் கோடரியால் வெட்டினான். ஆனால், அந்தப் பாம்பு கோடரி வெட்டுக்குத் தப்பி ஓட, எங்கே அந்தப் பாம்பு தன்னைப் பழிவாங்கிவிடுமோ என்று அஞ்சிய வேடன், அதைத் துரத்திச் சென்றான். வேகமாக ஓடிய பாம்பு ஒரு புற்றின் துளைக்குள் செல்ல முயன்றது. வேடன் பாம்பை மறுபடியும் வெட்டினான். அப்போதும் வெட்டுப்படாத பாம்பு படமெடுத்துச் சீறியது. மேலும் தண்ணீரும் ஊற்றாகப் பெருகியது. வேடனும் அவன் மனைவியும் ஒன்றும் புரியாமல் கலங்கித் தவித்தனர்.

அப்போது நாரதர் ஒரு முனிவரின் வேடத்தில் வந்து, அந்தப்

பெண்களுக்குப் பெருமை சேர்க்கும் நாரி பூஜை!



கிடைக்கவில்லை. வருத்தத்துடன் வீடு திரும்பியபோது, அங்கே விதவிதமாக உணவு வகைகள் இலைகளில் பரிமாறப்பட்டிருந்ததைப் பார்த்துதேவியின் அருளைப்புரிந்துகொண்டனர். அப்போது, 'எந்தத் துன்பத்திலும் எனக்கு உணவு படைத்த உங்கள் நல்ல மனதைப் பாராட்டுகிறேன். உங்களுடைய துன்ப நேரங்களில்கூட என்னைக் கைவிடாமல் பார்த்துக்கொண்டீர்கள். பக்தி நிறைந்த மனதுடன் யார் எங்கே நின்று அழைத்தாலும் நான் அருள்புரிவேன்' என்று அசரீரி கேட்டது. இந்த நிகழ்ச்சியை நினைவுகூரும் வகையில் சக்குளத்துக்காவில் லட்சக்கணக்கான பக்தர்கள் பொங்கல் வைக்கிறார்கள். அவர்களுடன் சேர்ந்து தேவியும் பொங்கல் வைப்பதாக நம்பப்படுகிறது.



> “எங்கெல்லாம் பெண்கள் ஆராதிக்கப்படுகிறார்களோ, அங்கெல்லாம் சகல ஐஸ்வரியங்களும் கிடைக்கும் என்பது ஐதிகம். அதன் அடிப்படையில் பெண்களை பீடத்தில் அமரச் செய்து, தேவியாக பாவித்து அவர்களின் பாதத்தை தலைமை பூசாரி தனது கைகளால் கழுவி அவர்களுக்கு பூஜைகள் செய்து வணங்குகிறார்.

புற்றுக்குள் அம்பிகை ஜலவாசம் செய்வதாகவும், புற்றை உடைத்து தேவியின் சிலையை எடுத்து பிரதிஷ்டை செய்து வழிபடும்படியும் கூறினார். வேடனும் அப்படியே தேவியின் சிலையை எடுத்து கோயிலில் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தான். தினமும் அவர்களால் முடிந்த அளவு உணவு சமைத்து தேவிக்கு நைவேத்தியம் செய்து வந்தனர். ஒருநாள் காட்டுக்குப் போய் நாளெல்லாம் அலைந்து திரிந்தும் எதுவும்

சக்குளத்து அம்மனை தரிசனம் செய்து பிரச்னைகள் தீர்ந்தவர்களும், நினைத்த காரியம் நடக்கவேண்டும் என்று நினைப்பவர்களும், கார்த்திகை மாத திருக்கார்த்திகை தினத்தில் பொங்கல் வைத்து தேவியின் அருளைப் பெறுகிறார்கள். இந்த நாளில் சுமார் ஐம்பது கிலோ மீட்டர் தொலைவுக்கு மேலாக லட்சக்கணக்கான பெண்கள் மைதானங்களிலும், சாலையின் இருபுறங்களிலும் நின்றபடி, புதிய மண்பானைகளில் ஒரே

நேரத்தில் பொங்கல் வைப்பார்கள். கோயில் முன்புறம் வைக்கப்பட்டுள்ள அடுப்பில் கோயிலின் முக்கிய காரியதரிசி, சுபமுகூர்த்த வேளையில் பொங்கல் வைப்பதற்கான அடுப்பில் தீயை பற்ற வைத்து தொடங்கி வைப்பார். உடனே பெண்களும் அடுப்பில் பொங்கல் வைக்கத் தொடங்குவார்கள். கேரளாவில் இந்த வைபவம் மிகவும் பிரசித்தி பெற்றதாகும். இந்த விழாவில் வெளிமாநிலங்கள் மட்டுமல்ல, வெளிநாடுகளில் இருந்தும்கூட வந்து பொங்கல் வைத்து அம்பிகையின் அருள் பெற்றுச் செல்கிறார்கள்.

மார்கழி மாதம் முதல் தேதி தொடங்கி பன்னிரண்டு நாள்கள் திருவிழா நடைபெறு கிறது. அப்போது பெண் பக்தர்கள் பன்னிரண்டு நாள்கள் விரதம் இருந்து சபரிமலையை போல் இருமுடி கட்டி வந்து தேவியை வழிபடுகிறார்கள். அதன் காரணமாக இந்தக் கோயில் பெண்களின் சபரிமலை என்று அழைக்கப்படுகிறது. திருவிழாவின் பதினோராவது நாளில் கலச பூஜையும், பன்னிரண்டாவது நாளில் காவடி நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. கலச பூஜையன்று ஒரு லட்சம் கலசங்களில் தேவிக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது.

மார்கழி மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமை அம்பிகையை கோயிலுக்கு வெளியில் எழுந்தருளச் செய்து சர்வ மத பிரார்த்தனை நடைபெறுகிறது. அன்றைய தினம் உலகில் எங்கும் இல்லாத ஒரு சம்பிரதாயமாக 'நாரி பூஜை' நடக்கிறது. எங்கெல்லாம் பெண்கள் ஆராதிக்கப்படுகிறார்களோ, அங்கெல்லாம் சகல ஐஸ்வரியங்களும் கிடைக்கும் என்பது ஐதிகம். அதன் அடிப்படையில் பெண்களை பீடத்தில் அமரச் செய்து, தேவியாக பாவித்து அவர்களின் பாதத்தை தலைமை பூசாரி தனது கைகளால் கழுவி அவர்களுக்கு பூஜைகள் செய்து வணங்குகிறார். ஒரு பெண்ணிற்கு முதல் மரியாதை கொடுக்கப்பட்டு, அதைத் தொடர்ந்து, ஆயிரக்கணக்கான பெண்களுக்கு பாத பூஜை நடத்தப்படுகிறது.








பெண்களின் சபரிமலை என்று போற்றப்படுவதும், பெண்களுக்கு பாதபூஜை செய்யப்படுவதுவதுமான சக்குளத்துக்காவு பகவதி அம்மனை அனைவரும் தரிசித்து அருள் பெறலாமே. ●

புவனா தியாகராஜன் | ஓவியம்: ஸ்யாம்

# ஜான்சிராணி லட்சுமி பாய்

**'சிப்பாய்க் கலகத்தின்போது எந்த ஒரு வீரனும் காட்டாத வீரத்துடன் போராடி கீர்த்தி பெற்றவர் ஜான்சியின் ராணி லட்சுமி பாய்'**

**-மகாத்மா காந்தி**

இந்தியப் பெண்மணிகளில் வீரத்திலும் விவேகத்திலும் முதன்மையானவர் ஜான்சி ராணி லட்சுமி பாய். அவளுடைய வீர வரலாறு படிக்கும் பெண்களை வீறுகொண்டு எழச் செய்வது! இத்தனைக்கும் அவள் அரச குலத்தில் பிறந்திருக்கவில்லை. பின் எப்படி அவள் வீரத்திலும் விவேகத்திலும் சிறந்து விளங்க முடிந்தது? எப்படி அவளால் ஜான்சியின் ராணியாக முடிசூட்டிக் கொள்ள முடிந்தது? அவளுடைய பூர்விகம் என்ன?

மகாராஷ்டிர பிராமண வகுப்பைச் சேர்ந்த மோராபத் தம்பே - பாகீரதி பாய் தம்பதி வாரணாசி நகரத்தில் வசித்து வந்தனர். மிகவும் எளிமையான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ஆனாலும், ஒழுக்கத்தில் உயர்ந்தவர்கள். அவர்களுக்கு 1835-ம் வருடம் நவம்பர் மாதம் ஒரு பெண்குழந்தை பிறந்தது. பெற்றோர் அந்தக் குழந்தைக்கு மணிகர்ணிகா என்று பெயர் சூட்டினர். மணிகர்ணிகா என்பது காசியின் கங்கை நதியில் உள்ள ஒரு படித்துறை. இங்குள்ள படித்துறையில் மணிகர்ணிகா என்ற குளம் உள்ளது. பார்வதி தேவி தன்னுடைய காதணிகளை இந்த இடத்தில்

“ மணிகர்ணிகா படிப்பில் சுட்டியாக இருந்ததைப் போலவே வீரத்திலும் விவேகத்திலும் சிறந்து விளங்கினாள். யானையேற்றம், குதிரையேற்றம், வாள்போர், துப்பாக்கி சுடும் பயிற்சி போன்றவற்றில் தன்னை ஆர்வத்துடன் ஈடுபடுத்திக்கொண்டாள்.

தவறவிட்டு விட்டதாகவும், அதைக் கண்டெடுக்க வேண்டி சிவபெருமான் இந்தக் குளத்தைத் தோண்டியதாகவும் சொல்லப்படுகிறது. மணிகர்ணிகா என்றால் அழகிய மணிகள் பதிக்கப்பட்ட காதணி என்று பொருள். பெற்றோரும் மற்றோரும் மணிகர்ணிகாவை மனு என்ற செல்லப் பெயரிட்டு அழைத்தனர்.

மராட்டிய அந்தணர் குடும்பத்தில் பிறந்த மணிகர்ணிகா, ஜான்சியின் ராணியானது எப்படி என்பதைத் தெரிந்துகொள்வதற்கு முன்பு, அப்போதைய இந்தியாவின் நிலைமையைத் தெரிந்துகொள்வது மிக அவசியம்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் தனித்தனி சமஸ்தானங்கள், தனித்தனி பாளையங்கள். தனித்தனி ஆட்சியாளர்கள் என்ற நிலைதான் இந்தியாவில் இருந்தது. கிழக்கிந்திய கம்பெனி என்ற பெயரில் வர்த்தகம் செய்ய வந்த ஆங்கிலேயர்கள், தனித் தனி சமஸ்தானங்களை சாம, பேத, தான, தண்டம் என்ற முறைகளில் கைப்பற்றிக்கொள்ள முனைந்தார்கள். எதிர்த்தவர்கள் தந்திரத்தால் வீழ்த்தப் பட்டார்கள். ஆனாலும், வீழ்த்தப்பட்டவர்கள் மறுபடியும் வீறுகொண்டு எழுந்தார்கள். எத்தனை இடர்கள் வந்தாலும் அந்நியர்க்கு அடிமை என்னும் இழிநிலையை நாங்கள் அடையமாட்டோம் என்ற உறுதி அவர்களுக்கு இருந்தது. உயிரே போனாலும் சரி, தாய்நாட்டின் மானம் காப்போம் என்ற உறுதியான லட்சியத்துடன் போரிட்டார்கள். அப்படிப்பட்ட மாவீரர்கள் வரலாறு எவரையும் வீறுகொண்டு எழச் செய்யும் ஆற்றல் கொண்டது. வீரர்கள் மட்டுமில்லை எண்ணற்ற வீராங்கனைகளும் தங்களை விடுதலை வேள்வியில் ஆகுதியாக்கிக் கொண்டனர். அவர்களுள் பிரதான மானவள்தான் மணிகர்ணிகா என்னும் ஜான்சி ராணி லட்சுமி பாய்.

மணிகர்ணிகாவுக்கு நான்கு வயது இருக்கும்போது அவளுடைய தாய் பாகீரதி இறந்துவிட்டாள். எனவே, அவளை வளர்க்கும் பொறுப்பு முழுவதும் தந்தையையே சார்ந்தது. அவர் பித்தூரில் உள்ள பேஷ்வாவின் நீதிமன்றத்தில் வேலை செய்து வந்தார். எனவே, பித்தூரை ஆட்சி செய்து வந்த இரண்டாம் பாஜிராவ் பேஷ்வாவுக்கும் மணிகர்ணிகாவின் தந்தை மோராபத் தம்பேவுக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. பாஜிராவ் மணிகர்ணிகாவிடம் மிகுந்த அன்பு செலுத்தினார். அவளுடைய சுட்டித்தனத்தால் பெரிதும் ஈர்க்கப்பட்ட பாஜிராவ் அவளை விளையாட்டுப் பிள்ளை என்ற பொருளில் ‘சப்பிலி’ என்று அழைத்து வந்தார்.

மணிகர்ணிகா படிப்பில் சுட்டியாக இருந்ததைப் போலவே வீரத்திலும் விவேகத்திலும் சிறந்து விளங்கினாள். பாஜிராவின் வளர்ப்பு மகன் நானா சாஹேப், இரண்டாம் பாஜிராவின் குடும்ப உறவினரும், நானா சாஹேபின் நண்பருமான தாந்தியா தோபே ஆகியோருடன் சேர்ந்துகொண்டு யானையேற்றம், குதிரையேற்றம், வாள்போர், துப்பாக்கி சுடும் பயிற்சி போன்றவற்றில் தன்னை ஆர்வத்துடன் ஈடுபடுத்திக்கொண்டாள். வேட்டையாடுவதிலும் சிறந்து விளங்கினாள். சிறு பிள்ளையாக இருந்தாலும் வீரத்தில் ஆண்களுக்குத் தான் சளைத்தவளல்ல என்பதைப் பலமுறை நிரூபித்திருக்கிறாள். எப்போதுமே அவளுடைய வாளுக்குக் கீழ்தான் எதிராளியின் வாள் சிக்குண்டு இருக்கும் என்று சொல்லும் அளவுக்கு போர்க்கலைகளில் தேர்ச்சி பெற்றிருந்தாள்.

பெண்களை ஆண்கள் அடக்கி ஆண்ட அந்தக் காலத்திலேயே, மணிகர்ணிகா ஆண்களை எதிர்த்து அடக்கத் துணிந்தாள். துணிந்தது மட்டுமல்ல அடக்கவும் செய்தாள். அவளுடைய வீரமும் விவேகமும் ஜான்சியின் அரண்மனையை எட்டியது.

அதன் விளைவு..?

–தொடரும்

செ.சரத்



இன்று வரை யாருமே நெருங்கிக் கூட பார்க்க முடியாத ஒப்பற்ற ஆற்றல் உடையது சூரியன் என்றால் அது மிகையில்லை. அதைவிட தன் ஒளி கொண்டு இரவில் நிலவை பட்டொளி வீசச் செய்ய வழிவகை செய்த கள்வன் அல்லவா?!

அதிலும் மானுட சமுதாயத்திற்கு கணக்கு பார்க்காமல் தங்குதடையின்றி வைட்டமின்-டி வழங்கியும், செடி கொடிகளின் ஒளிச்சேர்க் கைக்கு நாளும் புத்துயிர் வழங்கியும் அழகு பார்த்து வரும் ஓர் ஒப்பற்ற சக்தி. மேலும் போலியோவிற்கு மருந்து கண்டுபிடித்த 'ஜோனஸ் சால்க்'கிடம் ஏன் அதற்குக் காப்புரிமை பெறவில்லை என்று கேட்டதற்கு சூரியனுக்கு யாரேனும் காப்புரிமை பெறமுடியுமா என்று சமயோசிதமாக சூரியனைப் பற்றி பதில் கூறினார்.

அப்படிப்பட்ட சூரியன் மூலம் உயிர்பெறும் சூரிய மின்தகடுகளின் ஆயுட்காலம் முடிந்த பின் என்ன செய்வது? அதனின் எதிர்காலம்தான் என்ன? சரி, அதற்குமுன் அதற்கு காரணகர்த் தாவாய் அமையப்போகும் நிகழ்வுகளைத் தெரிந்துகொள்வது அவசியமாகிறது.

சூரிய ஒளியை பரிசுத்தமாக்கித் தருவது ஓசோன் மண்டலம் என்பது யாவரும் அறிந்ததே. அந்த பரிசுத்த ஒளியைப் பற்றி கோடானுகோடி

# சூரிய மின்தகடுகளின் மறுவாழ்வு?



நாளடைவில் காலாவதியான சூரிய மின்சக்தி தகடுகளை (இ–வேஸ்ட்) அப்புறப்படுத்த எந்தவொரு திட்டமும் பொறுப்பில் உள்ளவர்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை.

ஜீவராசிகள் இவ்வுலகில் வாழ்ந்து வந்தன, வாழ்ந்தும் வருகின்றன.

ஆம், இன்றும் புதுப்பிக்கத்தக்க ஆற்றலில் ஒன்றான சூரிய மின்சக்தியானது பல இடங்களிலும் பாரபட்சமின்றி ஒளியேற்றி வருகிறது. அத்தகைய சூரிய மின் சக்திக்கு அடிநாதமாய் விளங்குபவை போட்டோவோல்டாயிக் செல்கள் என்பது அனைவரும் அறிந்ததே.

தற்போதைய நிலையில் சூரிய மின்சக்தி ஆற்றலை உபயோகப்படுத்திக் கொள்வதில் இந்தியா முன்னேறிக் கொண்டிருக்கிறது. கடந்தாண்டு கூட நம் பாரதப் பிரதமர் ஆசியாவின் மிகப்பெரிய சூரிய மின்சக்தி பூங்காவை மத்திய பிரதேசத்தில் திறந்து வைத்தார். இப்படி பல்வேறு நிலைகளில் சூரிய மின்சக்தியை நாம் உபயோகித்து வருகிறோம். ஆனால், அதில் ஒரு பிரச்னை இருக்கிறது.

ஆம், அன்று நூறு ஜிகா வாட் அளவில் சூரிய மின்சக்தியில் இருந்து ஆற்றலை எடுப்பதற்கு இலக்கு நிர்ணயித்த நம்மால், நாளடைவில் காலாவதியான சூரிய மின்சக்தி தகடுகளை (இ-வேஸ்ட்) அப்புறப்படுத்த எந்தவொரு திட்டமும் பொறுப்பில் உள்ளவர்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. சூரிய மின்சக்தி ஆற்றலின் பயன்பாட்டை பெருக்கிக் கொள்வதற்கு 2010–ஆம் ஆண்டு ‘ஜவஹர்லால் நேரு தேசிய சூரிய மின்சக்தி திட்டம்’ தொடங்கப்பட்டது. அதன்படி கணக்கு

> சுற்றுச் சூழலை பாதிக்கும் பொருள்களான கண்ணாடி, அலுமினியம், சிலிகான் போட்டோவோல்டாயிக் அறை, தாமிரம், பிளாஸ்டிக் அத்துடன் அதனைச் சார்ந்து அர்செனிக், குரோம், ஈயம் மற்றும் வெள்ளீயம் சார்ந்த உலோகங்களும் பயன்படுத்தப்படுகின்றன.

வைத்துக் கொண்டால் 2035-ம் ஆண்டிற்கு மேல் அன்று (2010-ம் ஆண்டுக்குப் பின்) நிறுவப்பட்ட சூரியமின்தகடுகளை பயன்படுத்த முடியாது. குறிப்பிட்ட சூரிய மின்சக்தி தகட்டின் ஆயுள்காலம் என்பது 20 முதல் 25 ஆண்டுகள் வரை மட்டுமே. அதற்குப் பின் அதனின் ஆயுள்காலம் முடிவடைந்துவிடும். அடுத்த 15 ஆண்டுகளுக்குள் எப்படி நிறுவப்பட்ட 100 ஜிகாவாட் அளவிலான மின்தகடுகளை அப்புறப்படுத்தப் போகிறோம் என்பதற்கு விடை ஏதுமில்லை.

ஒரு 250 வாட் அளவிலான சூரிய மின்தகடு களைக் கொண்டு 100 ஜிகாவாட் அளவுக்கு சூரிய மின்சக்தி எடுக்க நிறுவுகிறோம் என்றால் அதன்மூலம் 77.6 லட்சம் டன் அளவிலான இ-வேஸ்ட் 25 வருடங்களுக்குள் பெறப்படும்.

சுற்றுச்சூழல், வனம் மற்றும் காலநிலை அமைச்சகம் 2016-ம் ஆண்டு இ-வேஸ்ட் மேலாண்மை தொடர்பான சில வழிமுறைகளை வெளியிட்டது. எனினும் அந்த வழிமுறைகளில் சூரிய மின்தகடுகளை அப்புறப்படுத்துவது பற்றி எந்தவொருவழிமுறையும் கூறப்படவில்லை. ஒவ்வோர் ஆண்டும் நம் நாட்டில் 17 லட்சம் டன் இ-வேஸ்ட் உருவாகிறது, அதிலும் ஆண்டுக்கு ஐந்து சதவீத வளர்ச்சியுடன் என்பதையும் கணக்கில் கொள்ளவேண்டும்.

மேலும் சூரிய மின்தகடுகள் என்பது சிலிகான் சார்ந்த போட்டோவோல்டாயிக் மற்றும் சிலிகான் அல்லாத (மெல்லிய படலம் சார்ந்து) தகடுகளாகவும் உள்ளன. எதுவாயினும் சுற்றுச் சூழலை பாதிக்கும் பொருள்களான கண்ணாடி, அலுமினியம், சிலிகான் போட்டோவோல்டாயிக் அறை, தாமிரம், பிளாஸ்டிக் அத்துடன் அதனைச் சார்ந்து அர்செனிக், குரோம், ஈயம் மற்றும் வெள்ளீயம் சார்ந்த உலோகங்களும் பயன்படுத்தப்படுகின்றன.

இதற்கிடையில், இதுவரை அவை காலாவதியான பிறகு எப்படி கையாள்வது அல்லது மறுசுழற்சி செய்வது என்பதை தயாரிப்பு நிறுவனங்களே பார்த்துக்கொள்ள வேண்டும் என்று புதிய மற்றும் புதுப்பிக்கத்தக்க எரிசக்தித் துறை அமைச்சகம் கூறியுள்ளது. எனினும் 2017 – 2019-க்கு இடைப்பட்ட காலத்தில் தேசிய பசுமைத் தீர்ப்பாயம் மூன்று முறை சூரிய போட்டோவோல்டாயிக் கழிவுகளை அகற்றுவது குறித்து மத்திய அரசு கொள்கையை வகுக்கவேண்டும் என அறிவுறுத்தியது.

மேலும் சூரிய போட்டோவோல்டாயிக் மறுசுழற்சி மையம் அமைப்பதற்கு மூலதனம் அதிகம் என்பதால் யாரும் முன்வருவதில்லை. எனினும் மேற்கத்திய நாடுகளில் மறுசுழற்சி மையங்கள் உள்ளன. அதிலும் ஐரோப்பாவில் சர்வதேச அளவில் போட்டோவோல்டாயிக் மறுசுழற்சி மையம் அமைந்துள்ளது. ஒருவேளை மறுசுழற்சி செய்யும் தொழில்நுட்பம் ஐரோப்பாவில் இல்லையென்றால் 2050 -ம் ஆண்டுக்குள் 60 மில்லியன் டன் அளவிலான போட்டோவோல்டாயிக் குப்பைகள் சேர்ந்து விடும் என்கிறார் அட்டிலா தாமஸ். மேலும்



**சூரிய ஒளியை பரிசுத்தமாக்கித் தருவது ஓசோன் மண்டலம் என்பது யாவரும் அறிந்ததே. அந்த பரிசுத்த ஒளியைப் பற்றி கோடானுகோடி ஜீவராசிகள் இவ்வுலகில் வாழ்ந்து வந்தன, வாழ்ந்தும் வருகின்றன.**



**தற்போதைய நிலையில் சூரிய மின்சக்தி ஆற்றலை உபயோகப்படுத்திக் கொள்வதில் இந்தியா முன்னேறிக் கொண்டிருக்கிறது. கடந்தாண்டு கூட நம் பாரதப் பிரதமர் ஆசியா வின் மிகப்பெரிய சூரிய மின்சக்தி பூங்காவை மத்திய பிரதேசத்தில் திறந்து வைத்தார்.**

அமெரிக்காவைச் சேர்ந்த ஆபவுண்டு சோலார், சன்டெக் சோலார் போன்ற நிறுவனங்கள் காலவரையின்றி உபயோகிக்கும் வகையில் சூரிய மின் தகடுகள் தயாரிப்பில் ஈடுபடுவதாகக் கூறிவருகின்றன.

இங்கு மற்றுமொன்றை கவனிக்க வேண்டும். அதாவது சூரியசக்தி உபகரணங்கள் பெரும் பாலும் இறக்குமதிதான் செய்யப்படுகின்றன. அண்மையில் இறக்குமதியைக் குறைப்பதற்காக சூரியசக்தி சாதனங்களுக்கு 20 சதவீத சுங்க வரி விதிக்க அரசு திட்டமிட்டு இருப்பதாக மத்திய நிதித்துறை இணையமைச்சர் கூறியிருந்தார். தற்போதைய நிலையில் இந்தியச் சந்தையில் சுமார் 80 சதவீத சூரியசக்தி உபகரணங்கள் சீன நிறுவனங்களின் தயாரிப்புகளே ஆகும்.

எனவே, தற்போதைய நிலையில் 2022-ம் ஆண்டிற்குள் 175 ஜிகாவாட் திறனை அடைவதற்கான இலக்கை புதுப்பிக்கத்தக்க ஆற்றல் மூலமும் குறிப்பாக சூரிய மின்சக்தி மூலம் அடைவோம் எனப் பேசிவரும் அதே வேளையில், நிச்சயம் சூரிய மின்சக்தி தகடுகள் மறுசுழற்சி செய்வதற்கான வழிமுறைகளையும், அதனைக் கையாள்வதற்கான உத்திகளையும் வகுக்க பொறுப்பில் உள்ளவர்கள் முன்வரவேண்டும். வருமுன் காப்போம்.



**கட்டுரையாளர்:**
வேளாண் ஆராய்ச்சியாளர்,
வேளாண்மை மற்றும் ஊரக
மேலாண்மைத்துறை,
தமிழ்நாடு வேளாண்மைப்
பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்-641003
மின்னஞ்சல்: saraths1995@gmail.com

சக்திகாமராஜ்



# தைப்பூச சிறப்புகள்

தைப்பூச வழிபாடு தமிழர்களின் தொன்மைச் சிறப்பு வாய்ந்த வழிபாடு என்பதற்கு இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன.

**பாசம் ஒன்று இலராய், பலபத்தர்கள்**

**வாசம் நாள்மலர் கொண்டு அடி வைகலும்,**

**ஈசன் எம்பெருமான் இடைமருதினில்**

**பூசம், நாம் புகுதும், புனல் ஆடவே**

என்று அப்பர் சுவாமிகள் தம்முடைய திருவிடைமருதூர் திருக்குறுந்தொகையில் பாடியிருக்கிறார்.

திருஞானசம்பந்தப் பெருமானும் பூம்பாவையை உயிர்த்தெழச் செய்யும் பதிகத்தில் பின்வருமாறு தைப் பூசம் பற்றிச் சிறப்பித்துக் கூறியிருக்கிறார்:

**மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்**

**கைப்பூசு நீற்றான் கபாலீச் சரம மர்ந்தான்**

**நெய்ப்பூசு மொன்புழுக்க னேரிழையார் கொண்டாடும்**

**தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய்**

'மயிலாப்பூரைச் சுற்றிலுமுள்ள வீடுகளில் வாழ்கின்ற அழகான பெண்கள் அனைவரும் மயிலை கபாலீஸ்வரர் ஆலயத்துக்கு இறைவனை வழிபட, தங்கள் அழகான முகத்துக்கு மேலும் அழகு சேர்க்கும்படி கண்களுக்கு மை தீட்டிக் கொண்டு வருகிறார்கள். ஊரே திருவிழாக் கோலம் பூண்டிருக்க, பெண்கள் நெய் சேர்த்துச் செய்த பொங்கலை கபாலீஸ்வரருக்கு நைவேத்தியம் செய்து அதை அனைவருக்கும் பிரசாதமாக வழங்குகிறார்கள். இப்படிப்பட்ட அழகிய திருவிழாவைக் காணாமலே போகிறாயா?' என்று மயிலாப்பூரில் பாம்பு தீண்டி இறந்து போன பூம்பாவையை உயிரூட்டி எழுப்புவதற்காக திருஞானசம்பந்தர் பாடிய பதிகம் இது. இதிலிருந்தே தமிழகத்தின் தொன்மைச் சிறப்பு வாய்ந்த விழாக்களில் தைப்பூசமும் ஒன்று என்பது தெளிவாகிறது. பூம்பாவையை உயிர்ப்பித்ததும்கூட தைப்பூசத்தன்றுதான் என்று சொல்லப்படுகிறது.

● கொங்கு மண்டலத்தில் உள்ள முருக பக்தர்கள் அனைவரும் கொடுமுடியில் பாயும் காவிரி தீர்த்தத்தை எடுத்துத் தீர்த்தக்காவடியாக அவரவர் ஊர் முருக ஆலயங்களுக்குக் கொண்டு போவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

● வள்ளலார் ராமலிங்க சுவாமிகள் ஒளி ரூபமாக இறைவனோடு கலந்த வடலூர் மேட்டுக்குப்பத்தில், தைப்பூச நாளில் லட்சக்கணக்கானோர் கூடி வள்ளலார் விழாவைக் கொண்டாடுகிறார்கள்.

● முருகப்பெருமான் வள்ளியை மணந்ததால் தெய்வயானை அம்மை ஊடல் கொள்ள, அதை முருகப்பெருமான் தீர்த்த நன்னாள் இது என்பதால், திருவூடல் விழா இந்நாளில் முருகப்பெருமான் ஆலயங்களில் நடைபெறும்.

● பூச நட்சத்திரம் குரு பகவானுக்கு உரியது என்பர். ஆலமர் செல்வனாம் தென்முகக் கடவுள் ஈசனுக்கே குருவாக அருளியவன் முருகப்பெருமான். எனவே இந்நாளில் முருகனை வழிபட குருவின் அருள் கிடைக்கும். இந்த வருடம் தைப்பூசம் முருகப்பெருமானுக்கு உரிய செவ்வாய்க் கிழமையன்று வருவது மிகவும் விசேஷம்.

● திருவரங்கத்து நம்பெருமாள் தன் தங்கையான சமயபுரம் மாரியம்மனுக்கு காவிரிக் கரையில் சீர் கொடுக்கும் விழா நடப்பதும் தைப்பூசத்தன்றுதான்.

● தில்லையில் தை மாத பௌர்ணமி கூடிய பூசத் திருநாளில்தான் வியாக்ரபாதர், பதஞ்சலி, ஜைமினி ஆகிய மூவருடன் மால், அயன், முப்பத்து முக்கோடி தேவர்கள், முனிவர்கள் மற்றும் சக்தி கண்டு மகிழ ஆனந்த தாண்டவம் ஆடி அருளினார் நடராஜப்பெருமான்.

● முருகனுக்குச் செலுத்தும் வேண்டுதல்களில் காவடி சமர்ப்பிப்பதும் ஒன்று. காவடிகளில் மலர்க் காவடி, பன்னீர் காவடி, பால் காவடி என்று பக்தர்கள் தங்கள் வேண்டுதலுக்கு ஏற்ப முருகக் கடவுளுக்குக் காணிக்கை செலுத்துவார்கள். ஒரு கம்பின் இரண்டு புறங்களிலும் நீண்ட பூக்குடலை போன்ற கூடை களைக் கட்டி அவற்றுள் ஒன்றில் தங்கள் காணிக்கைப் பொருள்களையும் மற்றொன்றில் தங்களுக்குத் தேவையான பொருள்களையும் வைத்து தோளில் சுமந்து வருவதே காவடி எடுத்தல். இறைவனுக்குக் காணிக்கையாக வைத்துச் செல்லும் குடலைகள் சிவகிரி என்றும் சக்திகிரி என்றும் சொல்லப்படுகின்றன. சிவகிரி என்பது ஞான வாழ்க்கையைக் குறிப்பிடும். சக்திகிரி என்பது உலகாயத வாழ்க்கையைக் குறிக்கும். மனிதர்கள் இரண்டையும் சம அளவில் சுமக்கவேண்டும் என்பதே தத்துவம். ●



மு.அரி

# சிரஞ்சீவியாக வாழ வெற்றிலையே வழி!

அர்ஜுனனின் அழகில் மயங்கிய ஊர்வசி அவனைத் தேடி மண்ணுலகம் வந்தபோது கொண்டு வந்த வசியச் செடி வெற்றிலை என்று புராணங்கள் கூறுகின்றன. ஆண்களை வசீகரிக்கச் செய்யும் வெற்றிலை அர்ஜுனன் புறக்கணிப்பால் தன் வசியத் தன்மையை இழந்ததாகவும் கூறப்படுகிறது. 10 வகை போகத்தில் வெற்றிலை போடுவது நான்காவது போகம் எனப்படுகிறது.

விரத நாள்களில் வெற்றிலை போடுவது தெய்வக் குற்றம் எனப்படும். ஒரு நாள் இதை மறந்துபோன ராணி மங்கம்மாள் வெற்றிலை போட்டுக் கொண்டார். தவறை உணர்ந்த பின், அதற்கு பிராயச்சித்தமாக யாத்ரீகர்கள் பயன்பெற புகழ்பெற்ற மதுரை - ராமேஸ்வரம் மங்கம்மாள் சாலையை உருவாக்கித் தந்தாராம். இப்படி வெற்றிலை குறித்து பல புராண, வரலாற்றுத் தகவல்கள் கொட்டிக் கிடக்கின்றன. அதேபோல் மருத்துவ உலகிலும் இதன் பயன்பாடு மிக மிக அதிகம். வீட்டின் மூலையில் எங்கேனும் ஒரு வெற்றிலைக் கொடியை நட்டு வளர்த்துப் பாருங்கள். உங்கள் வீட்டில் அநாவசியமாக யாரும் மருத்துவரைப் போய் பார்க்கவே மாட்டீர்கள்.

பல் உறுதி, வாய் மணம், புத்துணர்ச்சி போன்ற காரணங்களுக்காக வெற்றிலை போடுவது நமது வழக்கமாக இருந்து வந்துள்ளது. வெற்றிலையை மென்று உண்பதால் வயிற்றில் உள்ள புழு, பூச்சிகள் மடியும். உணவு செரிமானம் விரைவாகும். வயிற்றில் அமிலத்தன்மையை சீர்படுத்தும். வயிற்றில் உள்ள புண்களை ஆற்றும். வெளிக் காயங்களுக்கு வெற்றிலைப் பற்று போட காயம் ஆறும். கிருமி நாசினியாகவும் வெற்றிலை பயன்படுகிறது.

மூட்டுவலிக்கு வெற்றிலைச் சாறு நல்ல பயன் தரும். இரைப்பையை சுத்தம் செய்து, பெருங்குடல் வாயுக்களை வெளியே நீக்கி விடும். கொழுப்புச் சத்தைக் குறைத்து உடல் எடையை சீராக்கி வைத்திருக்கும். தொண்டை வலி, தொண்டையில் உண்டாகும் நோய்த்தொற்றுகளுக்கு வெற்றிலை சிறந்த மருந்தாகிறது. நெஞ்சு சளி, வறட்டு இருமல், சளி காய்ச்சல், நீர்கோர்த்து வரும் தலைவலி எல்லாவற்றுக்கும் வெற்றிலை சாறு நல்ல மருந்து.

வெற்றிலையில் வெள்ளை வெற்றிலை (சோழவந்தான்) கருப்பு வெற்றிலை அல்லது கமார் வெற்றிலை (கும்பகோணம்) கற்பூர வெற்றிலை என்று மூன்று வகை உள்ளது. மூன்றுமே மருத்துவ குணங்கள் கொண்டவை. காரம் அதிகம் உள்ள கருப்பு வெற்றிலையே அதிக வீரியமும் மருத்துவ குணமும் கொண்டது. தினமும் 2 அல்லது 3 வெற்றிலையை மென்று தின்று வந்தால் ஆண்களின் விறைப்புத் தன்மை பிரச்னை சரியாகும் என்று சித்த நூல்கள் கூறுகின்றன. ஆண்களுக்கு சிறந்ததொரு பலமூட்டியாக வெற்றிலை உள்ளது.

சுவாசக்கோளாறுகளுக்கு வெற்றிலை சிறந்த மருந்து. சளியால் மூக்கடைத்து சுவாசம் சிக்கலாகும்போது வெற்றிலை மென்று முழுங்க நலமாகும். பசியைத்தூண்டி நன்கு உணவு உண்ண வைக்கும். பால் சுரப்புக் குறைந்த தாய்மார்களுக்கு பால் பெருக்கியாக வெற்றிலை உதவும். நாடி நரம்புகளை சீராக்கி உடல் உற்சாகத்தையும் சுறுசுறுப்பையும் உருவாக்கும். பால் கட்டிக்கொண்டு வீக்கம் உண்டாகும் பெண்களுக்கு வெற்றிலையை வாட்டி மார்பில் வைத்துக் கட்ட வீக்கம் வற்றி, பால் வெளியேறி குணமாகும்.

வெற்றி இலை, நாகவல்லி, வேந்தன், தேவலோக பத்ரம், திரையல் என்றெல்லாம் பெயர் கொண்ட வெற்றிலை வாழ்நாளை நீடிக்கக் கூடியது. அதனால்தான் சிரஞ்சீவியான அனுமனுக்கு வெற்றிலை கொண்டு பூஜிக்கிறோம். வெறும் வெற்றிலை பூஜிக்கத் தகுதியானது இல்லை என்பதால் பாக்கு, பழம், இனிப்பு கொடுத்து அதை தாம்பூலம் என்று மாற்றினோம். தாம்பூலம் இல்லாத எந்த மங்கல நிகழ்வுமே நம்மிடம் இல்லை எனலாம். காரணம் வெற்றிலையின் மகத்துவம் அப்படி! குழந்தைகளுக்குக் கூட பெரியவர்கள், வெற்றிலைக் காம்பைக் கிள்ளிக் கொடுத்து மெல்லச் சொல்லுவார்கள்.

இது குழந்தைகளுக்கு நல்லது.

# தெய்வ மூலிகைகள் 8

கால்சியம் பெருகி எலும்புகளையும் நரம்புகளையும் வலுவாக்கும். சளி பிடித்த குழந்தைகளுக்குக் கூட வெற்றிலையை லேசாக நல்லெண்ணெய் தீபத்தில் வாட்டி நெஞ்சில் வைத்து ஒத்தடம் கொடுப்பார்கள். இதனால் சளி, இருமல் தொல்லைகள் நீங்கும் என்பது கண்கூடு.

காம்பு, நுனி, நடு நரம்பு நீக்கி இரண்டு வெற்றிலை கொஞ்சம் பாக்கு, ஒரு ஏலக்காய், ஒரு கிராம்பு, கொஞ்சமே சுண்ணாம்பு சேர்த்து சாப்பிட்டு வந்தால் குரல் வளமும் தேனாக மிளிரும் என்கிறது மருத்துவ நூல்கள். 'கரகர தொண்டைக்கு கமார் வெற்றிலை, கட்டையான தொண்டைக்கு வெள்ளை வெற்றிலை' என்பது பழமொழி. மலச்சிக்கல், வயிறு பொருமல், மலக்கட்டு போன்றவற்றுக்கும் வெற்றிலை நல்லது. மொத்தத்தில் வாதம், பித்தம், கபம் என்னும் மூன்று ஆதார நிலைகளை சரியான விகிதத்தில் வைத்து நலம் அளிக்கும் தெய்விக மூலிகையாக வெற்றிலையே இருப்பதால்தான் அதை கடவுளுக்கு அர்ப்பணிக்கும் உயர்ந்த நிலைக்கு உயர்த்தினோம். நல்ல ஞாபக சக்தி, உற்சாகம் எல்லாம் அளிக்கும் ஜீவமூலிகை வெற்றிலை.

வெற்றிலை ஆஸ்துமாவை குணப்படுத்தும். நுரையீரல் நோய்களை குணப்படுத்தும். வெற்றிலையில் தேங்காயெண்ணெய் தடவி சூட்டில் வாட்டி சொறி, சிரங்கு, படையில் தடவ குணமாகும். ஆமணக்கு எண்ணெய் தடவி நெருப்பில் வாட்டி கட்டியில் வைத்துக் கட்ட கட்டி உடைந்து குணமாகும். சிறிய தீப்புண்ணுக்கும் வெற்றிலை நல்ல நிவாரணம். சிறிய பூச்சிக் கடிகளுக்கும் வெற்றிலைச் சாறு நல்லது. வண்டு, சிறிய விஷமில்லாத பூச்சிகள் கடித்தால் 4 மிளகு வைத்து 2 வெற்றிலையை மென்று தின்றால் விஷக்கடி குணமாகும்.

இப்படி எல்லா வகையிலும் நன்மை செய்யும் வெற்றிலையை வெற்றி இலை என்றே சொல்லலாம். அதனால்தான் என்னமோ அனுமனைப் பார்த்த சீதாதேவி, வெற்றிலையைக் கிள்ளி தலையில் போட்டு சிரஞ்சீவியாக இரு என்று வாழ்த்தினார். அவரும் அவ்வாறே இன்றும் நித்தியமாக வாழ்ந்து வருகிறார். வெற்றிலையை நம் உணவோடு மீண்டும் சேர்ப்போம். வெற்றிகரமான வாழ்க்கையை மேற்கொள்வோம்.

**(குறிப்பு – புகையிலை இல்லாமல் வெற்றிலையை எடுத்துக்கொள்வோம்: அந்நியர் செய்த இந்த அவலத்தால்தான், வெற்றிலை போடுவதே தவறு என்றாகி விட்டது.)**

நிவேதிதா | ஓவியம்: ஸ்யாம்

# ‘தேசம் காக்க நமக்குப் பின்னும் வீரர்கள் வருவார்கள்’

## – மாவீரர் கரம் சிங்






‘போரில் நாம் இறந்துவிட்டாலும் எப்போதும் நாம் நினைவுகூரப்படுவோம்’ காஷ்மீரின் ரிச்மார்காலி யுத்தக் களத்தில் நின்றிருந்தபோது லான்ஸ் நாயக் கரம் சிங் உதிர்த்த வார்த்தைகள் இவை. பரம் வீர் சக்ரா விருதினைப் பெற்ற இரண்டாவது மாவீரர் கரம் சிங்.

’நாம் போரில் இறந்த பிறகும் நமக்குப் பிறகு போரைத் தொடர எண்ணற்ற வீரர்கள் நிச்சயம் வரவே செய்வார்கள்’ இவையும் கரம் சிங் உதிர்த்த வார்த்தைகள்தான்!

கரம் சிங், அன்றைய பிரிட்டிஷ் இந்தியாவின் பஞ்சாப் மாநிலத்தின் பர்னாலா மாவட்டத்தில் இருந்த சேக்னா என்ற கிராமத்தில் 1915 செப்டம்பர் மாதம் 15-ம் தேதி உத்தம் சிங் என்ற விவசாயியின் மகனாகப் பிறந்தார். அவருக்கும் தன் தந்தையைப் போலவே விவசாயத்தில்தான் ஆர்வம் இருந்தது. ஆனால், முதலாம் உலகப் போரில் அவருடைய கிராமத்தைச் சேர்ந்த வீரர்களின் குறிப்பாக கரம் சிங்கின் மாமா நிகழ்த்திய சாகசங்களைக் கேட்டதிலிருந்து தானும் ராணுவத்தில் சேர்ந்து தேசத்துக்கு சேவை செய்யவேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டுவிட்டது. குடும்பத்தினரும்






அவருடைய விருப்பத்துக்குச் சம்மதம் தெரிவிக்கவே, கரம் சிங் தன்னுடைய படிப்பை முடித்ததும் 1941-ம் வருடம், தான் பிறந்த அதே செப்டம்பர் மாதம் 15-ம் தேதி ராணுவத்தின் சிக் ரெஜிமென்ட் டின் 1- வது பட்டாலியனில் சேர்ந்தார்.

இரண்டாம் உலகப் போரின் போது பர்மா போர்முனையில் ஜப்பானிய வீரர்களுக்கு எதிரான போரில் இவருடைய துணிச்சலான செயல்கள் மற்றும் நடத்தையின் காரணமாக 1944-ம் வருடம் 'மிலிட்டரி மெடல்' என்ற விருதைப் பெற்றார். அதன் காரணமாக அவருடைய பட்டாலியனில் இருந்த மற்ற வீரர்களால் மதிக்கப்பட்டார். இதுவே அவர் பெற்ற முதல் விருது. மேலும், இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு அன்றைய பிரதமர் ஜவஹர்லால் நேருவினால் தேசியக்கொடி ஏற்றத் தேர்வு செய்யப்பட்ட ஐந்து வீரர்களில் கரம் சிங்கும் ஒருவர் என்பது குறிப்பிடத் தக்கது.

சுதந்திரத்தின்போது இந்தியாவி லிருந்து பிரிந்து சென்ற பாகிஸ்தான், அப்போது எவருடனும் சேராமல் தனியாக இருந்த காஷ்மீர் சமஸ்தானத்தை ஆக்கிரமித்துக் கொள்ள நினைத்து, தன்னுடைய ராணுவத்தினரை அனுப்பியது. குறுகிய காலத்திலேயே பாகிஸ்தான் ராணுவம் எல்லைக் கோட்டைக் கடந்து வந்து பல கிராமங்களை ஆக்கிரமித்துக்கொண்டது.

1948- ம் வருடம் கடுமையான கோடைக் காலத்தில் இந்திய ராணுவம் தித்வால் பகுதியில் கணிசமான வெற்றியைப் பெற்றது. தித்வால் இந்திய ராணுவத்தின் கட்டுப்பாட்டில் வந்தது. பாகிஸ்தான் ராணுவத்தினருக்கு ஆக்கிரமிப்பு பணிகளை மேற்கொள்ளும் முயற்சியைக் கைவிடுவதைத் தவிர வேறு வழியில்லாமல் போனது. போரில் ஈடுபடத் துணியாமலும்,

அதே நேரம் தித்வாலை விட்டு வெகு தொலைவிலும் இருந்தனர். தித்வாலைக் கைப்பற்றுவதற்காக அவர்கள் முயற்சித்த போதெல்லாம், இந்திய ராணுவத்தினரின் தற்காப்பு வியூகம் தடுத்து நிறுத்தியது. எப்பாடு பட்டாவது தித்வாலைக் கைப்பற்றிக் கொள்ளத் துடித்து, அந்தப் பகுதியை சுற்றி வளைக்க பீரங்கிகளுடன் கூடிய படைப் பிரிவு அனுப்பப்பட்டது. தித்வாலின் தெற்குப் பகுதியில் இருந்த ரிச்மர்காலி மற்றும் கிழக்குப் பகுதியில் இருந்த நஸ்டாசூர் ஆகிய பகுதிகளைக் கைப்பற்றிக் கொள்வதே பாகிஸ்தான் ராணுவத்தினரின் முதன்மையான நோக்கமாக இருந்தது.

> காயம் பட்டிருந்த இரண்டு வீரர்களை தன்னுடைய இரண்டு தோள்களிலும் சுமந்து கொண்டு, தன்னுடைய வீரர்களுக்கு தைரிய மூட்டும் வார்த்தைகளைச் சொல்லியபடியும், கையெறி குண்டுகளை வீசியபடியும் ஒவ்வொரு நிலையாக முன்னேறிச் சென்றார்.

அக்டோபர் மாதம் 13-ம் தேதி நள்ளிரவில் ரிச்மர்காலியில் நடைபெற்ற கடுமையான போரின்போது கரம் சிங் படையின் முன்னணியில் இருந்தார். இந்திய துருப்புகளை விட பாகிஸ்தான் துருப்புகள் பத்து மடங்கு அதிகமாக இருந்தாலும், வீரத்துக்கு பிரசித்தி பெற்ற சீக்கியர்கள் பாகிஸ்தானியர்களுடைய தாக்குதல்களை பலமுறை முறியடித்தனர். ஒரு கட்டத்தில் இந்திய ராணுவத்தினரின் வெடிமருந்துகள் தீர்ந்துவிட்டது. எனவே, கரம் சிங் தன்னுடைய வீரர்களை பிரதான அணியினருடன் இணைந்துகொள்ளும்படி உத்தரவிட்டார். பிறகு ஒரு சிப்பாயியின் உதவியுடன் காயம் பட்டிருந்த இரண்டு வீரர்களை தன்னுடைய இரண்டு தோள்களிலும் சுமந்துகொண்டு, தன்னுடைய வீரர்களுக்கு தைரியமூட்டும் வார்த்தைகளைச் சொல்லியபடியும், கையெறி குண்டுகளை வீசியபடியும் ஒவ்வொரு நிலையாக முன்னேறிச் சென்றார்.

இரண்டு கைகளிலும் காயம் பட்டிருந்த நிலையிலும் போர்முனையின் முன்னணியில் இருந்த பதுங்கு குழியை விட்டு வெளியேற மறுத்து, தன்னுடைய தாக்குதல்களைத் தொடர்ந்தார். ஐந்தாவது முறையான தாக்குதலின்போது இரண்டு பாகிஸ்தானிய வீரர்கள் கரம் சிங் இருந்த பதுங்கு குழியை தகர்க்க முயன்றனர். ஆனால், கரம் சிங் பதுங்குகுழியை விட்டு வெளியேறி தன் கையிலிருந்த குத்தீட்டியால் இரண்டு பாகிஸ்தான் வீரர்களைக் கொன்றுவிட்டார். தங்களுடைய முயற்சி வீணாகிவிட்டதைக் கண்ட பாகிஸ்தானியர்கள் மனதளவில் சோர்ந்துவிட்டனர். கரம் சிங்கும் அவருடைய வீரர்களும் மேலும் மூன்று தாக்குதல்களை முறியடித்து விட்டதால், தங்களுடைய நிலையைக் கைப்பற்ற முடியாமல் பாகிஸ்தான் துருப்புகள் பின்வாங்கியது.

கரம் சிங்கின் இந்தத் துணிச்சலான சாகசங்களை கௌரவிக்கும் வகையில் 1950-ம் வருடம் ஜூன் மாதம் 21-ம் தேதி அவருக்கு இந்திய ராணுவத்தின் மிக உயரிய விருதும், இந்திய அரசின் இரண்டாவது உயரிய விருதுமான பரம் வீர் சக்ரா விருது வழங்கப்பட்டது. இந்த விருதை உயிருடன் இருக்கும்போது பெற்ற மிகச் சில வீரர்களில் கரம் சிங்கும் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது.

லான்ஸ் நாயக்காக இருந்த கரம் சிங், பின்னர் சுபேதாராகவும், சுபேதார் மேஜராகவும் பதவிஉயர்வு கொடுக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார். ●



இரா.பொன்னாண்டான்




கடவுள் அனைத்துயிரையும்
ககனத்தில் படைத்துவிட்டு
அவற்றுக்கு-
உணவளிக்கும் உயர் பணியை
யாரிடம் ஒப்புவித்தார்?

புதுச் சொல்மாலை விளைவிக்கும்
புலவனிடமா ?
புலிபோல் வீரம்கொண்ட மறவனிடமா?
இல்லை.
புதுநெல் சோலை விளைவிக்கும்
உழவனிடமல்லவா அளித்தார்!.

உலகில் மனிதருக்கு மட்டுமா
உழவன் உணவளிக்கிறான்?

விளைந்த தானியங்கள் அவன்
வீட்டுக்கு வருமுன்னே
பறவைக்கும் பூச்சிக்கும் விலங்குக்கும்
பங்கிட்டு விட்டுத்தானே வருகிறான்...

உலகமெனும் ரதம்
உருள அச்சாய் இருப்பவன்
விவசாயி.
நிலமகள் மேல் பச்சை எனும் கச்சை
நெகிழாதிருக்க அதனை இறுக்கும்
கயிறாய்
இருப்பவன் விவசாயி.

அவன் வயலில்
பயிர்கள் வளர்ந்தால்தானே
கடவுள்
உயிர்களை வளர்ப்பார்!
மனிதர்
வயிறுகளை நிறைப்பார்!

மருத நிலத்து மாந்தர்
இல்லையெனில்
துறவு உளத்து
வேந்தரும் இல்லை.
துரும்பும் இல்லை.

உழவன் கரங்கள் ஓய்ந்தால்
உலகின் வரங்கள் சாபமாகும்.
நிலத்தின் நிறங்கள் மாறினால்
நீள்புவி நியதிகள் சேதமாகும்.

இயற்கையின் சீற்றம்
பருவநிலை மாற்றம்
விஞ்ஞான மாற்றம்
எல்லாம் மாறிக்கொண்டே இருக்கிறது.

உழவன் வாழ்க்கை மாறவில்லை.
அவன் வறுமைப் புண்
இன்னும் ஆறவில்லை.

அதற்கு மருந்திடுமா?
இந்தத்
தைத்திங்கள்.
தமிழர் திருநாளாம்
தைப்பொங்கல்.!

வருடம் தோறும் பொங்கல்
வருகிறது.
பொங்கல் பானையும்
பொங்கி வழிகிறது.

உலகுக்கே உணவளிக்கும்
உழவன் வீட்டுப்பானையில்
பொங்கல் மட்டும்
பொங்கினால் போதுமா?

உழவன் உள்ளமும்
வெல்லமாய் இனித்து
பொங்கி வழியவேண்டும்.
உலகோர் அதற்கு ஓர்
உபாயம் செய்திடல்வேண்டும்! ●



# ரசித்து ருசிப்போம்



மார்கழி மாதம் ஆண்டாளுக்கு மிகவும் பிரியமான மாதம். குறிப்பாக மார்கழி மாதம் 27-ம் தேதி மிகவும் விசேஷம். பெருமாள் கோயில்களில் கூடாரவல்லி என்ற வைபவம் நடைபெறுவது மரபு. அன்றைய தினம் ஆண்டாளை தரிசித்து வழிபடு பவர்களுக்கு, திருமண வரம் கைகூடும் என்பது நம்பிக்கை.

தன்னைக் கண்ணன் ஏற்றுக்கொண்டால் நூறு தடா வெண்ணெயும், நூறு தடா அக்கார அடிசிலும் அர்ப்பணிப்பதாக ஆண்டாள் திருமாலிருஞ்சோலை அழகரிடம் பிரார்த்தித்துக் கொண்டாள். ஆனால், அவள் திருவரங்கத்தில் அரங்கனுடன் ஐக்கியமாகிவிட்டதால், அவளால் தன்னுடைய பிரார்த்தனையை நிறைவேற்ற முடியவில்லை. பின் வந்த ராமாநுஜர் இந்தச் செய்தியை அறிந்து ஆண்டாளின் பிரார்த்தனையை நிறை வேற்றினார். இதன் காரண மாகவே ஆண்டாளின் வாழித் திருநாமத்தில், 'பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே' என்று ஆண்டாள் போற்றப்படுகிறாள். இனி அக்கார அடிசில் செய்வது எப்படி என்று பார்ப்போம்...

# அக்கார அடிசில்



**தேவையான பொருள்கள்:**

பச்சரிசி - 250 கிராம்

வெல்லம் - 500 கிராம்

பால் - 1 லிட்டர்

நெய் - 250 கிராம்

பாசிப்பருப்பு - 150 கிராம்

பச்சைக் கற்பூரம் - சிறிது

முந்திரி - 50 கிராம்

ஏலக்காய் - தேவையான அளவு

குங்குமப்பூ - ஒரு சிட்டிகை அளவு

பாசிப்பருப்பையும், பச்சரிசியையும் வாணலியில் தனித்தனியாக வறுத்துக்கொள்ள வேண்டும். நன்கு களைந்து சுத்தம் செய்து கொள்ளவேண்டும் வெண்கலப் பானையில். எடுத்து வைத்துள்ள பாலில் பாதி அளவு ஊற்றிப் பால் கொதிக்க ஆரம்பித்ததும் பாசிப்பருப்பைக் களைந்து சுத்தம் செய்து அதில் சேர்க்கவேண்டும். சிறிது நேரத்துக்கு ஒருமுறை பால் அடியில் பிடிக்காமல் கிளறிக்கொண்டே இருக்க வேண்டும். பருப்பு வெந்ததும் அரிசியைக் களைந்து அதோடு சேர்த்து விட்டு மிச்சம் இருக்கும் பாலையும் கலந்து விட வேண்டும். அரிசி நன்கு வெந்து குழையும் பதம் வந்ததும் வெல்லத்தைத் தூளாக்கிச் சுத்தம் செய்து சேர்க்கவும். வெல்லத்தின் வாசனை போக நன்கு கொதிக்கவேண்டும். வெல்லம், பால் இரண்டும் சேர்ந்து வரும் வரையில் நெய்யைக் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்த்து, இடைவிடாமல் கிளற வேண்டும். நன்கு கலந்து பாயசம் போலவும் இல்லாமல் ரொம்பக் கெட்டியாகவும் இல்லாமல் கையால் எடுத்துச் சாப்பிடும் பதம் வரும் வரை கிளற வேண்டும். பின்னர் ஏலப்பொடி சேர்த்துப் பாலில் கரைத்த குங்குமப் பூவும் சேர்த்துப் பச்சைக்கற்பூரமும் சேர்க்கவும். நெய்யில் முந்திரிபருப்பு வறுத்துச் சேர்க்க வேண்டும்.

# ராசிபலன்



மேஷம்

**(அசுவினி, பரணி, கார்த்திகை 1-ம் பாதம்)**

தந்தை மற்றும் அரசாங்க வழிகளில் அனுகூலம் பெறும் மாதம் இது. எதிர்பாராத இடத்திலிருந்து பணவரவு ஒன்று கிடைக்கும். குலதெய்வ கோயிலுக்குக் குடும்பத்துடன் சென்று வருவீர்கள். மாதக்கடைசியில் கணவன் மனைவி உறவில் அந்நியோன்யம் அதிகரிக்கும். தாய்மாமன் மற்றும் உடன்பிறப்புகளிடம் வீண் வாக்குவாதங்களைத் தவிர்க்கவும். மாதப் பிற்பகுதியில் வீட்டு மனை வாங்கும் முயற்சிகளில் ஈடுபடலாம். தனவரவு அதிகமிருப்பதால் செலவுகளை சமாளித்து விடுவீர்கள். வியாபாரம் செய்பவர்களுக்கு அரசாங்கக் கடன் கிடைக்கும். அலுவலகத்தில் மறைமுக எதிர்ப்புகள் இருந்தாலும் எல்லாவற்றையும் சமாளித்து விடுவீர்கள். முருகனை வழிபட இன்னல்கள் அனைத்தும் நீங்கும். மொத்தத்தில் இது ஒரு ஏற்றமான மாதமாக இருக்கப் போகின்றது.

**சாதகமான நாள்கள்:** 3,6,12,15,19,22,24.

**சந்திராஷ்டம நாள்கள்:** 1 மாலை வரை பிறகு 26 பிற்பகல் முதல் 27, 28



ரிஷபம்

**(கார்த்திகை 2,3,4-ம் பாதம், ரோஹிணி, மிருகசீரிடம் 1,2-ம் பாதம்)**

பெற்றோரால் அனுகூலம் உண்டு. மாதப் பிற்பகுதியில் குடும்பத்தில் தனவரவு அதிகரிக்கும். குருவின் பார்வையினால் மாத முற்பகுதியில் வீட்டிற்குத் தேவையான பொருள்களை வாங்குவீர்கள். பாதியில் நின்றுபோன வீடு கட்டும் வேலைகளை மீண்டும் தொடங்குவீர்கள். பழைய நண்பர்களை சந்தித்துப் பேசி மகிழும் வாய்ப்பு ஏற்படும். உறவினர் வருகையால் குடும்பத்தில் மகிழச்சி ஏற்படும். திருமண வயதில் உள்ளவர்களுக்குத் திருமண ஏற்பாடுகள் நடக்கும். மாதப் பிற்பகுதியில் வணிகரீதியான பயணம் ஏற்படலாம். வியாபாரத்தில் பழைய நிலுவைத்தொகை வசூலாகும். வேலையில் சற்று சிரமம் இருந்தாலும் சமாளித்து விடுவீர்கள். துர்கையை வணங்க வெற்றி கிடைக்கும்.

**சாதகமான நாள்கள்:** 5,8,13,16,19,23,26.

**சந்திராஷ்டம நாள்கள்:** 1 மாலை முதல் 2, 3 மற்றும் 29, 30, 31 பிற்பகல் வரை



மிதுனம்

**(மிருகசீரிடம் 3,4-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3-ம் பாதம்)**

திருமணம் கைகூடும். குடும்பத்தாரும் உறவினர்களும் மரியாதையுடன் நடந்துகொள்வார்கள். எதிர்பார்த்த இடத்தில் இருந்து கைமாற்றாகப் பெரிய தொகை ஒன்று கிடைக்கும். உடன்பிறப்பிற்குச் செலவு செய்யும் சூழ்நிலை ஏற்படும். தந்தையின் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. அரசாங்க சம்பந்தமான விஷயங்களில் சிறிது தாமதம் ஏற்படும். குடும்பத்தினருடன் அருகிலுள்ள கோயில்களுக்குச் சென்று வருவீர்கள். புதிய முயற்சிகளைச் சற்று கவனத்துடன் மேற்கொள்ள வேண்டும். பெண்களுக்குப் பணவரவு அதிகமாகும். வேலை பார்ப்பவர்களுக்கு இடமாற்றம் நிச்சயம் கிடைக்கும். சக ஊழியர்களால் மறைமுக தொந்தரவுகள் இருந்தாலும் சாமர்த்தியமாகப் பேசி சமாளிப்பீர்கள். ஹயக்ரீவரை வழிபடுவது நலம் தரும்.

**சாதகமான நாள்கள்:** 2,7,11,14,20,23,28.

**சந்திராஷ்டம நாள்கள்:** 4, 5, 6 மாலை வரை

மேஷம் முதல் மீனம் வரை 12 ராசிகளுக்கான ராசிபலன் அதிர்ஷ்டக் குறிப்புகள் மற்றும் எளிய பரிகாரங்களுடன் கணித்துத் தந்திருக்கிறார் ஜோதிடர் **பூமணி நாராயணன்,**
B.A. (Tamil) M.Sc (Astrology) ஜோதிடக் கலை பயிற்றுநர்



**கடகம்**

**(புனர்பூசம் 4-ம் பாதம், பூசம், ஆயில்யம்)**

மகிழ்ச்சியுடன் காணப்படுவீர்கள். பணவரவு இருந்தபடி இருக்கும். குடும்பம் சம்பந்தமான சுப நிகழ்ச்சி ஒன்றில் கலந்துகொண்டு உறவினருடன் பேசி மகிழ்வீர்கள். குடும்பம் மற்றும் பணம் சம்பந்தமான வீண் வாக்குவாதங்களில் ஈடுபடுவதைத் தவிருங்கள். தாயின் உடல்நலனில் கவனம் கொள்ளவும். வியாபாரம் சம்பந்தமாக குறுகிய தூரப் பயணம் ஒன்று ஏற்படும். வியாபாரத்தில் புதிய முயற்சிகளையும் மற்றும் நண்பர்களையும் தவிர்க்கவும். அலுவலகத்தில் புதிதாக வந்த நபரின் உதவியால் எல்லா வேலைகளையும் கச்சிதமாக முடித்து விடுவீர்கள். குடும்பத்தில் உள்ள பெண்கள் தாய் வழி சொந்தங்களின் வருகையால் மகிழ்ச்சி அடைவீர்கள். பராசக்தியை வழிபட அனைத்து நன்மைகளையும் பெறுவீர்கள்.

**சாதகமான நாள்கள்:** 3,9,14,17,21,25,30.

**சந்திராஷ்டம நாள்கள்:** 6 மாலை முதல் 7, 8 மாலை வரை



**சிம்மம்**

**(மகம், பூரம், உத்திரம் 1-ம் பாதம்)**

திருமணத்திற்கு காத்திருந்தவர்களுக்கு திருமணம் கைகூடும். ஆரோக்கியம் சிறக்கும். மிகவும் கௌரவத்துடன் நடத்தப்படுவீர்கள். மாதம் முழுவதும் பெற்றோரின் ஆதரவு உண்டு. சிலருக்குப் புதிய மனை வாங்கும் யோகம் வாய்க்கும். குடும்பத்துடன் கோயில் விசேஷங்களில் கலந்துகொள்வீர்கள். மாதக்கடைசியில் புதிய முயற்சிகள் வெற்றி பெறும். பெண்குழந்தை வழியில் சுபகாரியம் ஏற்படும். அலுவலகத்தில் வேலையில் எந்த பிரச்னையும் இருக்காது. பணவரவு அதிகரிக்கும். சகோதர சகோதரிகளிடம் இருந்து உதவிகள் கிடைக்கும். அலுவலகத்தில் பணியாளர்களிடம் நிதானத்துடனும் கவனமுடனும் பேசவும். சிவபெருமானை வழிபட அனைத்து பிரச்னைகளும் நீங்கும். முன்னேற்றமான மாதமாக அமையும்.

**சாதகமான நாள்கள்:** 2,6,13,18,23,27,31.

**சந்திராஷ்டம நாள்கள்:** 8 மாலை முதல் 9, 10 பிற்பகல் வரை



**கன்னி**

**(உத்திரம் 2,3,4 -ம் பாதம் ஹஸ்தம், சித்திரை 1,2-ம் பாதம்)**

திருப்தியான வகையில் பணவரவு மிகுந்திருக்கும். குழந்தைகளின் உடல்நலனில் சற்று கவனம் தேவை. தந்தை வழியில் எதிர்பாராத பணவரவு கிடைக்கும். சிலருக்கு அரசு வேலை கிடைக்க வாய்ப்பு உண்டு. குடும்பத்தில் உள்ளவர்களின் திருமண நிகழ்ச்சியால் சந்தோஷம் அதிகரிக்கும். தந்தை வழியில் சுபச் செலவுகள் ஏற்படும். தொழில் மற்றும் வியாபார வகையில் மறைமுக எதிர்ப்புகள் இருப்பதால் கவனமுடன் நடந்துகொள்ளவும். குடும்பத்தில் உள்ள பெண்கள் அண்டை அயலாரிடம் அளவுடன் பழகவும். குடும்பத்தில் உள்ள வேலையாள்களின் பிரச்னை நீங்கி வேலைகள் சுமுகமாக நடைபெறும். கணவன் மனைவி உறவு மேம்படும். வெள்ளிக்கிழமைகளில் இஷ்ட தெய்வத்தை வணங்கிவருவது நல்லது.

**சாதகமான நாள்கள்:** 1,4,8,16,19,24,28.

**சந்திராஷ்டம நாள்கள்:** 10 பிற்பகல் முதல் 11, 12





துலாம்

**(சித்திரை 3,4-ம் பாதம், சுவாதி, விசாகம் 1,2,3-ம் பாதம்)**

அபரிதமான பணவரவு ஏற்படப் போகும் மாதமிது. மூத்த உடன்பிறப்புகளிடம் இருந்து உதவிகள் கிடைக்கும். நெடுநாள்களுக்குப் பிறகு, உதவியாளர் ஒருவர் கிடைப்பார். கண் சம்பந்தமான சில குறைபாடுகள் ஏற்படக்கூடும் என்றாலும் உரிய சிகிச்சையின் மூலம் குணம் கிடைத்துவிடும். தொழிலாளர்களால் தடைப் பட்ட வீடு கட்டும் வேலை மாதப் பிற்பகுதியில் தொடரும். வியாபாரம் சம்பந்தமான பயணங்களை சற்று தள்ளிப் போடுதல் நலம் பயக்கும். வியாபாரத்தை விரிவுபடுத்தும் பணிகளில் இறங்கலாம். அலுவலகத்தில் வேலை பார்க்கும் பெண்கள் சற்று சிரமத்துடனே பணிகளை முடிக்கவேண்டி வரும். குருபகவானை வணங்கினால் அனைத்து நன்மைகளும் ஏற்படும்.

**சாதகமான நாள்கள்:** 2,5,1018,23,25,29.

**சந்திராஷ்டம நாள்கள்:** 13, 14, 15 காலை வரை



விருச்சிகம்

**(விசாகம் 4-ம் பாதம், அனுஷம், கேட்டை)**

தைரியத்துடன் காணப்படுவீர்கள். தக்க சமயத்தில் உடன்பிறப்புகளின் உதவிகள் கிடைக்கும். முயற்சிகள் மாதப் பிற்பகுதியில் நிறைவேறும். உடல்நலனில் சற்று கவனம் எடுத்துக் கொள்ள வேண்டிய நேரமிது. அரசாங்க சம்பந்தமான அனைத்து முயற்சிகளும் மாதப் பிற்பகுதியில் பலிதமாகும். தாயாரின் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. பணிமாற்றத்துடன் கூடிய பதவிஉயர்வு ஏற்பட வாய்ப்புண்டு. அரசாங்க வழியில் மாதப் பிற்பகுதியில் அனுகூலம் உண்டு. வியாபாரம் செய்பவர்களுக்கு முன்னேற்றமான காலம் இது. அலுவலகத்தில் பணியில் இருந்த அவமானங்களும், தடங்கல்களும் நீங்கும். தன்வந்திரி பகவானை வழிபட குடும்ப ஆரோக்கியம் சிறக்கும்.

**சாதகமான நாள்கள்:** 3,8,13,18,22,26,30.

**சந்திராஷ்டம நாள்கள்:** 15 காலை முதல் 16, 17 பிற்பகல் வரை



தனுசு

**(மூலம், பூராடம், உத்திராடம் 1-ம் பாதம்)**

தந்தையின் அனுகூலத்துடனும் உதவியுடனும் பல செயல்களைச் செய்து முடிப்பீர்கள். தாயாரிடம் இருந்து மறைமுகமாகப் பண உதவி கிடைக்கும். வெளியூரில் படிக்கும் குழந்தைகளின் உடல்நலனில் கவனம் தேவை. வங்கியிடமிருந்து வீடு சம்பந்தமான கடன் உதவி மாதக் கடைசியில் கிடைக்க வாய்ப்பு உண்டு. உடல் ஆரோக்கியத்திலும், நண்பர்களிடம் பேசும் விஷயங்களிலும் கவனம் தேவை. உத்தியோகத்தில் பிரச்னைகள் இருந்தாலும் குருவின் பார்வையினால் அதனைச் சரி செய்து விடுவீர்கள். வியாபாரத்தை விரிவுபடுத்தும் முயற்சியை சற்று தள்ளிப் போடவும். ஆன்மிகப் பயணத்தில் சுபச்செலவுகள் ஏற்படும். குலதெய்வக் கோயிலுக்குப் போய்வருவது நல்லது.

**சாதகமான நாள்கள்:** 1,5,9,14,23,27,31.

**சந்திராஷ்டம நாள்கள்:** 17 பிற்பகல் முதல் 18,19, 20 காலை வரை





மகரம்

**(உத்திராடம் 2,3,4-ம் பாதம், திருவோணம், அவிட்டம் 1,2-ம் பாதம்)**

குடும்பத்தினரால் கௌரவத்துடன் நடத்தப்படுவீர்கள். தாயார் மற்றும் மூத்த உடன்பிறப்பால் நன்மை ஏற்படும். சிலருக்குக் குடும்பச் சொத்து கிடைக்கும் யோகம் உண்டு. குடும்ப விஷயங்களிலும், பணம், நகை சம்பந்தப்பட்ட விஷயங்களிலும் உண்மையை பேசுகிறேன் என்று வம்பில் மாட்டிக்கொள்ள வேண்டாம். சாதுரியமாக நடந்துகொள்ளவும். மாதப் பிற்பகுதியில் தனவரவு அதிகரிக்கும். சுபவிரயங்கள் ஏற்படும். பண்டிகைகளை உற்றார் உறவினர்களுடன் கொண்டாடி மகிழ்வீர்கள். வியாபாரத்தில் மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். பழைய நிலுவைத் தொகை வசூலாகும். அலுவலகத்தில் சில பிரச்னைகள் ஏற்பட்டு குருவின் பார்வையினால் உடனே சரியாகிவிடும். குலதெய்வத்தை வழிபட சங்கடங்கள் தீரும்.

**சாதகமான நாள்கள்:** 2,6,10,14,25,28,30.

**சந்திராஷ்டம நாள்கள்:** 20 காலை முதல் 21, 22 முற்பகல் வரை



கும்பம்

**(அவிட்டம் 3,4-ம் பாதம், சதயம், பூரட்டாதி 1,2,3-ம் பாதம்)**

பணப்புழக்கம் அதிகம் இருக்கும். வீட்டிலும் வெளியிலும் நேர்மையானவர் என்று பெயர் பெற்று கௌரவத்துடன் நடத்தப்படுவீர்கள். தந்தை மற்றும் குழந்தைகளின் ஆரோக்கியம் சிறக்கும். பிரச்னையாக இருக்கும் குடும்ப ரீதியான விஷயங்களை சற்றுப் பொறுமையுடன் விட்டுப் பிடியுங்கள். எதிர்பார்த்ததை விடப் பணவரவும் அதிர்ஷ்டமும் அதிகமாக இருக்கும். தொழிலில் புதிய முயற்சிகளை புகுத்தி வெற்றி காண்பீர்கள். சக ஊழியர்களின் ஆதரவு என்றுமே உண்டு. மாணவர்களுக்கு படிப்பிலும் ஆரோக்கியத்திலும் அதிக கவனம் தேவை. சிலருக்கு வேலை நிமித்தமாக சிலருக்கு வெளிநாட்டுப் பயணம் ஏற்படும். பெருமாளை வழிபட சகல நன்மைகளும் ஏற்படும்.

**சாதகமான நாள்கள்:** 3,8,11,15,20,26,30.

**சந்திராஷ்டம நாள்கள்:** 22 முற்பகல் முதல் 23, 24 பிற்பகல் வரை



மீனம்

**(பூரட்டாதி 4 - ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி)**

பணப்புழக்கம் வேண்டிய அளவிற்கு இருக்கும். சிலருக்கு வேலை நிமித்தமாக வெளிநாடோ வெளி மாநிலமோ செல்லும் சூழ்நிலை ஏற்படும். தந்தையிடமிருந்து அனுகூலம் கிடைக்கும். சிலருக்கு அரசு வேலை கிடைக்கும் வாய்ப்பு உண்டு. அலுவலகத்தில் வேலை சம்பந்தமான பிரச்னைகள் இருந்தாலும் அதனை சக ஊழியர்களிடம் பேசி உடனே சரி செய்து, மேலதிகாரிகளிடம் பாராட்டும் பெறுவீர்கள். பணம் மற்றும் நகைகளைக் கையாளும் விஷயத்தில் சற்று கவனத்துடனும் பொறுப்புடனும் நடந்துகொள்வது நல்லது. வாகனம் வாங்கும் யோசனையைச் சற்றுத் தள்ளிப் போடவும். தட்சிணாமூர்த்தியை வழிபட பணவரவு அதிகரிக்கும். துணிச்சலுடன் செயல்படும் மாதம் இது.

**சாதகமான நாள்கள்:** 1,6,9,14,18,22,29

**சந்திராஷ்டம நாள்கள்:** 24 பிற்பகல் முதல் 25, 26 பிற்பகல் வரை

சிறுகதை

கல்கி கிருஷ்ணமூர்த்தி | ஓவியம்: பிரபா

# மயிலைக் காளை

கிருஷ்ணக் கோனான் இருபது வயதுக் காளைப் பிராயத்தை அடைந்திருந்தான். ஒரு தவறு செய்தால், பின்னால் அதிலிருந்து பல தவறுகள் நேரிடுகின்றன என்பதற்கு இது ஓர் உதாரணமல்லவா? இருபது வருஷத்திற்கு முன்னால் கிருஷ்ணன் இந்த பூமியில் பிறந்தான். அதன் பிறகு அவனுடைய அனுமதியைக் கேளாமலே வயது ஆகிக் கொண்டு வந்தது. இருபது பிராயம் நிரம்பும் காலம் சமீபித்தது.

நேற்று அவனுடைய மயிலைக்காளை கெட்டுப் போய் இன்று அதை அவன் தேடி அலையும்படி நேரிட்டதற்குக் காரணம் என்னவென்று நினைக்கிறீர்கள்? என்னுடைய அபிப்பிராயம், அவனுடைய பிராயம்தான் அதற்குக் காரணம் என்பது. ஒரு வேளை நீங்கள் வித்தியாசமாய் நினைக்கக் கூடும். அவன் மாட்டை கவனிக்க வேண்டிய நேரத்தில் பூங்கொடியைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்ததுதான் அதற்குக் காரணம் என்று சொல்லக்கூடும். உண்மைதான். ஆனால், அதற்கும் காரணம் அவனுடைய



பிராயம்தான் என்று நான் கருதுகிறேன்.

மாசி மாதம்; அறுவடை, போரடியெல்லாம் ஆகிவிட்டது. இந்நாட்களில் கிருஷ்ணன் மத்தியானம் சாப்பிட்ட பிறகு மாடுகளை ஓட்டிக் கொண்டு அவற்றை மேயவிடுவதற்காக போவது வழக்கம். சாதாரணமாய் அறுவடையான வயல்களிலே மாடுகள் மேயும், லயன்கரை மேஸ்திரி எவனும் வரமாட்டனென்று தோன்றுகிற சமயத்தில், கிருஷ்ணன், மாடுகளை ராஜன் வாய்க்காலுக்கு அப்பால் ஓட்டுவான். கொள்ளிடத்துக்கும் ராஜன் வாய்க்காலுக்கும் மத்தியிலுள்ள அடர்ந்த காட்டில் மாடுகள் மேயும், பொழுது சாய்வதற்குள் திரும்பி ஓட்டிக் கொண்டு வந்துவிடுவான். நன்றாக இருட்டுவதற்கு முன் வீட்டுக்கு வராவிட்டால் அவனுடைய தாயார் ரொம்பவும் கவலைப்படுவாள்.

நேற்று வழக்கம்போல் அவன் மாடுகளை வயல்களில் மேயவிட்டு ராஜன் வாய்க்காலின் கரையில் உட்கார்ந்திருந்தான். பூங்கொடியின் மேல் ஞாபகம் போயிற்று. அவளைப் பார்த்தே ஒரு மாதம் இருக்கும். நெருங்கிப் பேசி எத்தனையோ நாளாகி விட்டது. இப்போதெல்லாம் அவள் வெளியிலேயே வருவது இல்லை. பாவம் நோயாளி மாமனுக்குப் பணிவிடை செய்துகொண்டு வீட்டுக்குள்ளேயே அடைந்து இருக்கிறாள்.

பெருமாள் இன்னும் எத்தனை நாளைக்கு இப்படி செத்தும் சாகாமலும் கிடப்பான்? அவன் செத்துப் போனால் அப்புறம் பூங்கொடியின் கதி என்ன? அவள் பிறகு அந்த வீட்டில் இருக்க முடியுமா? பெருமாளின் பெண்டாட்டி பெரிய பிசாசு அல்லவா? அவளிடம் பூங்கொடி என்ன பாடுபடுவாள்? இப்போது -மாமன் இருக்கும்போதே இந்தப் பாடுபடுத்துகிறாளே?

என்னவெல்லாமோ யோசித்த பின்னர் கடைசியாக அவன் மனம் கல்யாணத்தில் வந்து நின்றது. ஏழைப் பெண்தான்; மாமன் செத்துவிட்டால் நாதியற்றவளாகி விடுவாள்.

இக்காரணத்தினால் தன் தாயார் ஒரு வேளை தடை சொன்னாலும் சொல்லலாம். ஆனால் இந்த ஒரு விஷயத்தில் மட்டும் தாயார் மறுத்துச் சொன்னால்கூடக் கேட்க முடியாது என்று அவனுக்குத் தோன்றிற்று...

இப்படி அவன் எண்ணமிட்டுக் கொண்டிருக் கையில் மயிலைக் காளை ராஜன் வாய்க்காலில் இறங்கி அக்கரை போவதை அவன் கண்கள் பார்த்தன. மூளைக்குச் செய்தியும் அனுப்பின. ஆனால், அந்தச் சமயம் அவன் மூளை வேறு முக்கிய விஷயத்தில் ஈடுபட்டிருந்தபடியால் அச் செய்தியை ஏற்றுக் கொள்ளவில்லை. வேறொரு சமயமாயிருந்தால், 'பொழுது போகிற சமயம்'; இப்போது மயிலைக் காளையை அக்கரை போகவிடக்கூடாது; காட்டில் புகுந்துவிட்டால் தேடுவது கஷ்டம்' என்று சொல்லி உடனே ஓடிச்சென்று மறித்து ஓட்டியிருப்பான். 'த்தா! த்தா! ஏ மயிலை! என்று இரண்டு அதட்டல் போட்டால் கூட அநேகமாய் அது திரும்பியிருக்கும். இப்போதோ பார்த்துக்கொண்டே சும்மா இருந்துவிட்டான்.

கடைசியில், மயிலைக்காளை இல்லாமலே இரவு வீடு திரும்ப வேண்டியதாயிற்று. அதன் பலனாகத்தான் கிருஷ்ணன் இன்று ஊரெல்லாம் மாசிமகத்துக்காக ஓமாம்புலியூருக்குப் போயிருக்க, தான் மாத்திரம் காட்டிலே அலைந்து கொண்டிருக்க நேர்ந்தது.

அன்று காலையில் எழுந்ததும், அவன் பச்சை மிளகாயும், உப்பும் கடித்துக் கொண்டு பழைய சோறு சாப்பிட்டுவிட்டுக் கையில் புல்லாங்குழலுடன் கிளம்பினான். கிருஷ்ணன் புல்லாங்குழல் வாசித்தால் வெகு அபூர்வமாயிருக்கும். நல்ல சங்கீதம் கேட்டுப் பண்பட்ட காதுகளையுடையோரை அவனுடைய வேணுகானம் துரத்தித் துரத்தி அடிக்கும் வல்லமையுடையது. ஆனால், அவனுடைய மாடுகளை அழைப்பதற்கு அந்த அபூர்வ கானமே போதுமாயிருந்தது. இதை உத்தேசிக்கும்போதுதான், பழைய பிருந்தாவன கிருஷ்ணனுடைய வேணுகான மகிமையிலும் எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டாகிறது.

ராஜன் வாய்க்காலைக் கடந்து அப்பாலுள்ள காட்டில் புகுந்தான். காடு என்றதும் வானமளாவிய விருட்சங்களையும், புலிகளையும், கரடிகளையும் எண்ணிக்கொள்ள வேண்டாம். நான் சொல்லும் கொள்ளிடக்கரைக் காட்டில் மூன்று ஆள் உயரத்துக்கு மேற்பட்ட மரம் ஒன்றுகூடக் கிடையாது. ஆனாலும் காடு காடுதான். முட்புதர்களும், மற்றச் செடி கொடிகளும் அடர்ந்து மனிதன் பிரவேசிப்பது அசாத்தியமாயிருக்கும். அபூர்வமாய் அங்குமிங்குமுள்ள ஒற்றையடிப்பாதை வழியாய் ஒருவன் உள் புகுந்துவிட்டால் அவனைத் தேடிக் கண்டுபிடிப்பது பிரம்மப்பிரயத்தனம்தான். பாம்புகள், கீரிகள், நரிகள் ஆகியவைதான் இந்தக் காட்டில் உள்ள துஷ்டப் பிராணிகள்.

இப்படிப்பட்ட காட்டில் கிருஷ்ணன் காலை

> நல்ல சங்கீதம் கேட்டுப் பண்பட்ட காதுகளையுடையோரை அவனுடைய வேணுகானம் துரத்தித் துரத்தி அடிக்கும் வல்லமையுடையது. ஆனால், அவனுடைய மாடுகளை அழைப்பதற்கு அந்த அபூர்வ கானமே போதுமாயிருந்தது.

நேரமெல்லாம் சுற்றி அலைந்தான். மத்தியானம் வரையில் தேடியும் பயனில்லை. கடைசியாக மாடு போனதுதான் என்று தீர்மானித்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். தண்ணீர் குடிப்பதற்காகக் கொள்ளிடத்தின் கரையோர மடுவில் இறங்கி முதலைக்கு இரையானாலும் ஆகியிருக்கலாம். அவனுடைய நெஞ்சில் பாறாங்கல்லை வைத்தது போல் பாரமாயிருந்தது.

இவ்வளவும் பூங்கொடியினால் ஏற்பட்டது என்பதை நினைக்க அவனுக்கு அவள் மேல் கோபம் வந்தது. எதற்காக அவளைப் பற்றித் தான் நினைக்க வேண்டும்? இவ்வளவுக்கும் அவள் தன்னைப் பற்றி நினைப்பதாகவே தெரியவில்லை. என்னதான் வீட்டிலே வேலையென்றாலும், மனத்திலே மட்டும் பிரியம் இருந்தால் இப்படி இருப்பாளா? அவள் வீட்டுப் பக்கம் தான் போகும்போது கூட வெளியில் வந்து தலைகாட்டுவதில்லை. சே! அப்படிப்பட்டவளிடம்தான் ஏன் மனத்தை செலுத்த வேண்டும்? அருமையான மயிலைக் காளை நஷ்டமானதுதான் லாபம்! ('ஓய் கிருஷ்ணரே! உம்முடைய மூளைக் குழப்பத்தில் எதை வேண்டுமானாலும் சொல்வீர் போலிருக்கிறது! நஷ்டம் எப்படி ஐயா லாபம் ஆகும்?')

இருக்கட்டும், ஆயாளையாவது திருப்தி செய்யலாம். நல்ல பணக்கார வீட்டுப் பெண்ணாகப் பார்த்துக் கட்டிக்கொள்ளலாம். இந்த அநாதைப் பெண் யாருக்கு வேண்டும். இவளை நினைக்காமல் விட்டுவிட வேண்டியதுதான். தள்ளு!

சலசலவென்று சப்தம் கேட்டது. கிருஷ்ணன் சப்தம் வந்த இடத்தை நோக்கினான். யாருடைய நினைவை ஒழிக்க வேண்டுமென்று தீவிரமாகத் தீர்மானம் செய்து கொண்டிருந்தானோ அந்தப் பெண்ணின் உருவம் புதர்களை நீக்கிக்கொண்டு வெளிவந்தது. கிருஷ்ணனைப் பார்த்ததும், திருதிருவென்று விழித்தது.

கிருஷ்ணன் - வேகமாய் நடந்துகொண்டிருந்த கிருஷ்ணன் - நின்று விட்டான்.

இரண்டு பேரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு கொஞ்ச நேரம் நின்றார்கள். பிறகு சமீபத்தில் வந்தார்கள்.

அவர்களுடைய சம்பாஷணை சாதாரணமாய் இத்தகைய சந்தர்ப்பங்களில் காதலர்களின் சம்பாஷணை எப்படியிருக்குமோ அப்படியில்லையென்பதை வெட்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். கொஞ்ச நேரம் சும்மா நின்றபின், கிருஷ்ணன், "நீ மகத்துக்குப் போகலையா?" என்று கேட்டான்.

"நீ போகலையா?"

"நான்தான் இங்கே இருக்கேனே; எப்படிப் போயிருப்பேன்?"

"நானுந்தான் இங்கே இருக்கேனே, எப்படிப் போயிருப்பேன்?"

"நீ என்ன, சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளையா?"

என்று சிரித்துக் கொண்டே கிருஷ்ணன் கேட்டான்.

பூங்கொடி பெருமூச்செறிந்தாள். "கிளியாயிருந்தால் எவ்வளவோ நல்லாயிருக்குமே? ஒரு கஷ்டமுமில்லாமல் காட்டிலே சுகமாய் பறந்து திரிந்து கொண்டிருக்கலாமே?" என்றாள்.

கிருஷ்ணனுக்கு அவனையறியாமல் அசட்டுத்தனமாய்ப் பேச வந்தது. "நாம் இரண்டு பேரும் கிளியாய்ப் போய் விடலாம்" என்றான். பிறகு, ஏதோ நினைத்துக் கொண்டவன் போல், "ஆமாம்! பூங்கொடி! நீ ஏன் முன்னைப் போலெல்லாம் வெளியிலேயே வருவதில்லை? உன்னைக் காணவே முடிகிறதில்லையே?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியாதா? சொல்ல வேணுமா? ஒரு வருஷமாய்த்தான் என்னுடைய மாமன் பக்க வாயு வந்து படுத்த படுக்கையாய்க் கிடக்காரே. மாமி ஒன்றும் அவரைச் சரியாய்க் கவனிக்கிறதில்லை. நான்தான் எப்போதும் அவர் பக்கத்தில் இருக்க வேண்டியிருக்கிறது. கொஞ்சம் அக்கம் பக்கம் போனால் கூட மாமன் கூப்பிட்டு விடுகிறார். எப்படி வெளியே வருகிறது?"

"நிஜந்தான். ஆனால் இரண்டொரு தடவை என்னைப் பார்த்தபோது கூடப் பாராதது போல போய் விட்டாயே! அது ஏன்?" என்றான் கிருஷ்ணன்.

வெட்கத்துடன் கூடிய புன்னகை அவள் முகத்தில் ஒரு கணம் தோன்றியது. "நாம் இன்னும் சின்னப்பிள்ளைகளா என்ன? ஆண்பிள்ளைகளுடன் பேசக்கூடாதென்று மாமி ஒருநாள் கண்டித்தாள். அவள் சொல்கிறது நியாயந்தானே? யாராவது ஏதாவது சொல்ல மாட்டார்களா?" என்றாள்.

இப்போது கிருஷ்ணன் உள்ளத்தில் ஒரு முக்கியமான கேள்வி எழுந்தது. இன்றைய தினம் பூங்கொடி எதற்காக இக் காட்டுக்கு வந்தாள்? - இந்தக் கேள்வி முன்னமே தனக்கு தோன்றாதது அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. ஒருகணம், "ஒரு வேளை நம்மைப் பார்க்கத்தான் வந்திருப்பாளோ?" என்று எண்ணினான். அந்த எண்ணமே அவன் உடம்பை ஓர் அங்குலம் பூரிக்கச் செய்தது. உடனே அப்படி இருக்க முடியாதென்று தெரிந்தது. தான் காட்டில் மயிலைக் காளையைத் தேடுவது அவளுக்குத் தெரிந்திருக்க இடமில்லை. மேலும் தன்னைப் பார்த்ததும் அப்படித் திடுக்கிட்டு நின்றாளே? ஏதோ மர்மம் இருக்க வேண்டும்.

"ஆமாம், இன்று எதற்காக காட்டுக்கு வந்தாய்?" என்று கேட்டான்.

"அதைச் சொல்லக்கூடாது" என்று கூறி பூங்கொடி பக்கத்திலிருந்த புதரிலிருந்து இலைகளைக் கிள்ளிப் போடத் தொடங்கினாள்.

கிருஷ்ணனுடைய மனத்தில் இப்போது பயங்கரமான ஒரு சந்தேகம் உண்டாயிற்று. வேறு யாரேனும் ஓர் ஆண்பிள்ளையைச் சந்திப்பதற்காக ஒரு வேளை வந்திருப்பாளோ? கண்ணால் கண்டிராத - வாஸ்தவத்தில் இல்லாத - ஒரு மனிதனின் பேரில் கிருஷ்ணனுக்கு அளவிலாத அசூயை உண்டாயிற்று; சொல்ல முடியாத கோபம் வந்தது. பூங்கொடி சற்று நேரம் தரையில் கால் கட்டை விரலால் கோடு கிழித்துக்



கொண்டே கூறினாள்.

"நான் ஒன்று சொல்கிறேன். கேள்; நான் தப்புக் காரியம் எதுவும் செய்யவில்லை. சத்தியமாகச் சொல்கிறேன்; தப்பு ஒன்றும் நடக்கவில்லை. ஆனால், நான் இன்று இந்தக் காட்டுக்கு வந்தது ஒருவருக்கும் தெரியக் கூடாது. ஒருவரிடமும் சொல்லாமல் இருப்பாயா?"

"ஒருவரிடமும் நான் சொல்லவில்லை. ஆனால் எதற்காக வந்தாய் என்று என்னிடம்

மட்டும் சொல்லிவிடு” என்றான் கிருஷ்ணன்.

"அதுவும் இப்போது சொல்லமுடியாது. சமயம் வரும்போது நானே சொல்கிறேன். அதுவரையில் நீ என்னைக் கேட்கக்கூடாது. இது ஒரு முக்கியமான காரியம். என்னிடம் உனக்கு நம்பிக்கை இல்லையா? நான் தப்பான காரியம் செய்வேனென்று உனக்குத் தோன்றுகிறதா?"

இப்படிச் சற்று நேரம் வாக்குவாதம் நடந்தது. கடைசியில் பெண்மைதான் வெற்றி பெற்றது. "இதோ பார், பூங்கொடி! உன்னை நான் நம்புகிறேன். ஆனால், எனக்குத் துரோகம் செய்தாயென்று மட்டும் எப்போதாவது தெரிந்ததோ, அப்புறம் என்ன செய்வேனென்று தெரியாது" என்றான் கிருஷ்ணன்.

"துரோகமா? அப்படியென்றால் என்ன?" என்றாள், பூங்கொடி.

இருவரும் ராஜன் வாய்க்கால் வரையில் சேர்ந்து போனார்கள். அங்கே கிருஷ்ணன் பின் தங்கினான். பூங்கொடி போய்க் கொஞ்ச நேரத்துக்கு பிறகு வீடு சென்றான். வீட்டுக் கொல்லையிலே மயிலைக் காளை சாவதானமாய் அசை போட்டுக்கொண்டு நின்றது.

வேறு சமயமாயிருந்தால், கிருஷ்ணன் அதை நாலு அடி அடித்திருப்பான். மகத்துக்கு ஓமாம் புலியூர் போக முடியாமல் செய்துவிட்டதல்லவா? ஆனால், அச்சமயம் அவன் உள்ளம் மிகவும் குதூகலம் அடைந்திருந்தது. எனவே, மயிலைக் காளையின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அதன் கன்னங்களை தடவிக் கொடுத்தான்.

பெருமாளை நேயர்களுக்கு நான் அறிமுகப்படுத்தி வைக்க முடியாமல் இருப்பதற்காக வருந்துகிறேன். ஏனெனில், கதையில் அந்தக் கட்டத்திற்கு நான் வருவதற்கு முன்னால் அவர் காலமாகி விட்டார்.

அதற்காக வருத்தப்பட வேண்டாம். அவருக்குப் பதிலாக அவருடைய மனைவியைத் தெரிந்து கொள்ளுங்கள். அந்த அம்மாளுடைய உண்மைப் பெயர் என்னமோ நமக்குத் தெரியாது. ஊரிலே எல்லாரும் பிடாரி என்று அவளை அழைத்தார்கள். அந்தப் பெயரே நமக்குப் போதுமானது.

பிடாரி, பெருமாளுக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்பட்டாள். முதல் மனைவியிடம் பெருமாள் ரொம்ப ஆசை வைத்திருந்தார். அவளுக்குக் குழந்தை பிறக்காதது ஒன்றுதான் அவருக்குக் குறையாயிருந்தது. அவள் இறந்த பிறகு, நம்முடைய சொத்துக்கு வாரிசு இல்லாமல் போகிறதே என்பதற்காக இன்னொரு தாரத்தை மணந்துகொண்டார். இரண்டாவது மனைவி அவருடைய விருப்பத்தை என்னவோ நிறைவேற்றி வைத்தாள். மூன்று குழந்தைகள் பிறந்தன. ஆனாலும், இந்தப் பிடாரியை ஏன் கல்யாணம் செய்து கொண்டோமென்று அவர் பலமுறை வருத்தப்பட்டதுண்டு. அவர் இறந்ததும், பிடாரி தன் தலையிலிருந்த பெரிய பாரம் இறங்கியது போல் பெருமூச்சு விட்டாள். இனிமேல் வீடு வாசல் நில புலன் எல்லாவற்றிற்கும் தானே எஜமானி. ஐந்து வயதுப் பிள்ளை மேஜராகும் வரையில் தன் இஷ்டப்படி எல்லாம் நடக்கும். ஊரையே ஓர் ஆட்டு ஆட்டி வைக்கலாம்.

ஸ்ரீமதி பிடாரிதேவியிடம் நீங்கள் அனுதாபம் காட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவள் கட்சியிலும் கொஞ்சம் நியாயம் உண்டென்பதைக் கவனிக்க வேண்டும். பெருமாள் ரொம்பக் கண்டிப்புக்காரர். அவரிருந்த வரையில் அவளுடைய பிடாரித் தனத்தின் முழுச் சக்தியையும் வெளிக் காட்ட முடியாமலிருந்தது. அதிலும் அவர் நோயாய்க் கிடந்த காலத்தில் படுத்தி வைத்த பாடு சொல்லத் தரமல்ல. பூங்கொடிதான் அவர் பக்கத்தில் இருக்கலாம். வேறு யாராவது பக்கத்தில் போனாலும் 'வள்வள்' என்று விழுகிறது. இதனால் இந்தப் பெண்ணுக்குத்தான் எவ்வளவு கர்வம்! அந்தக் கொட்டத்தையெல்லாம் இப்போது பார்க்கலாம்.

கோனார் காலஞ்சென்று நான்கு நாள் ஆயிற்று. வர வேண்டிய உறவு முறையினர் எல்லாரும் வந்து போய் விட்டார்கள். பிடாரி அம்மாள், வீட்டில் ஒருவரும் இல்லாத சமயம் வாசல் கதவைத் தாழிட்டு விட்டு வந்தாள். கூடத்தின் மத்தியிலிருந்த களஞ்சியத்தண்டை சென்றாள். அதன் ஓர் ஓரத்தில் பெயர்த்திருந்த இரண்டு கல்லைப் பிடுங்கி அகற்றினாள். அவ்வாறு ஏற்பட்ட துவாரத்தில் கையை விட்டாள். அச்சமயம் அவளுடைய முகத்தைப் பார்த்தவர்களுக்கு ஆட்டுப் பட்டிக்குள் நுழையும் நரியின் முகம் ஞாபகத்துக்கு வந்திருக்கக் கூடும்.

ஆனால், அடுத்த நிமிஷம் அந்த முகத்திலேயே ஏமாற்றமும் திகிலும் கலந்து காணப்பட்டன. மறுபடியும் மறுபடியும் கையை விட்டுத் துழாவினாள். கந்தல் துணி ஒன்றுதான் அகப்பட்டது.

அந்தப் பணம் எங்கே போயிருக்கும்?

**- அடுத்த இதழில்**

பி.கே.ஸ்வாமி

இந்திய மருத்துவ முறைகளும் இந்து மதத்தின் வேதாந்தமும் ஒன்றோடு மற்றொன்று இணைந்தவை. இரண்டுமே மனிதனின் மனநிலைக்கும், உடல் ஆரோக்கியத்துக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு என்று கருதுபவை ஆகும். இயற்கையோடு இணைந்த வாழ்க்கையே நீடித்த ஆயுளைக் கொடுக்கும் என்று அவை மதிப்பிடுகின்றன. அதனால் இந்திய மருத்துவ முறைகளும் இயல்பாக வும், நாம் வாழ்க்கையை மேற்கொள்ளும் விதத்தை அடிப்படையாகவும் கொண்டிருக்கின்றன.

நாம் ‘பர்ஸனாலிட்டி’ (personality) என்று சொல்லும்போது பொதுவாக உடல் அமைப்பைப் பற்றியே நினைக்கிறோம். இது உடல், மனம் இரண்டையுமே சார்ந்தது என்பது வேதாந்த கருத்து. அதனால்தான் நீண்ட ஆயுள் கொண்டவர்கள் பலர் சிந்தனைவாதிகளாகவும் இருந்திருக்கிறார்கள்.

மனம் அலைபாயுமானால் உடல்நிலை பாதிக்கப்படும். அதனால் மனதை அமைதியாக வைத்துக் கொள்வதே நிலையான உடல் ஆரோக்கியத்துக்கு வழிவகுக்கும். இதற்கான சாதனங்களாக நமது மதம் விரதம், ஜபம், தியானம் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.

வியாதியைக் குணப்படுத்துவது என்பது மருந்து சாப்பிடுவது மட்டும் அல்ல. அவனுடைய வாழ்க்கையின் அணுகுமுறை, மனோதிடம், குடும்ப அமைதி ஆகிய பலவும் அவனுடைய மனோபலத்தையும் உடல் பலத்தையும் நிர்ணயிக்கின்றன. ஆகவே ஆரோக்கியம் என்பது முழுக் கண்ணோட்டமாகவே அணுகப்பட வேண்டும். இன்றைய மருத்துவ முறைதான் நமது மதம் போதிக்கும் வாழ்க்கை முறையும் ஆகும்.

பதஞ்சலி முனிவர் உருவாக்கிய முறையான அஷ்டாங்க யோகம் மனதையும் உடலையும் ஒற்றுமையாக இணங்கிச் செயல்பட வைப்பது, மனதின் ஆதாரச் சக்தி அவரால் பிரகிருதி எனக் குறிப்பிடப்படுகிறது. இதுவே நமது வாழ்க்கையில் அமைதியையும் நிலையான மகிழ்ச்சியையும் உருவாக்கக் கூடியது. இந்த நிலையில் உடம்பு வியாதிகளிலிருந்து விடுபடுகிறது. உடம்பை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளவும், வியாதிகளைத் தவிர்க்கவும் இது இரண்டு விதமாகப் பயன்படுகிறது. மேலும் அவனுடைய ஞாபகசக்தி, அறிவுக்கூர்மை ஆகியவற்றையும் இது தூண்டி விடுகிறது. இயற்கையை ஒட்டிய பயிற்சி முறையே இதன் ஆதாரம் ஆகும். ஆகையால் இதை எளியவர்களும் சுலபமாகச் செலவின்றி மேற்கொள்ளலாம்.



மேலும் இந்துமதம் அளிக்கும் இரண்டு முக்கியமான சிகிச்சை முறைகள் தந்திர சாஸ்திரத்தையும், சித்தயோகத்தையும் ஒட்டி அமைந்தவை. உலகத்தை இயக்கும் இரண்டு சக்திகள் நிலையானவையும், நகரக் கூடிய இயங்கும் பண்பும் கொண்டவையும் ஆகும். இவற்றையே இந்துமதம் சிவம் என்றும் சக்தி

# நீண்ட ஆயுளுடன்



## ஆரோக்கியமாக வாழ...



> வாழ்க்கையைச் சரியாகப் புரிந்துகொள்ளவும். அதற்கேற்றபடி அதன் தரத்தை உயர்த்திக் கொள்ளவும், நீண்ட ஆயுளை நிம்மதியாக அமைத்துக் கொள்ளவும், இந்து மதம் இயற்கையை ஒட்டி வாழ நமக்குக் கற்றுக் கொடுக்கிறது.

என்றும் கூறுகிறது. இந்த இரண்டையும் ஒட்டியே உலகத்தின் இயக்கம் முழுவதும் அமைந்திருக்கிறது.

ஒரு மனிதனால் தனது தேவை எது என்பதைச் சரியாக உணர்ந்து செயல்பட முடிவதில்லை. அவனது தவறான நடைமுறைகளே பெரும்பாலும் வியாதிகளுக்கு அடிப்படையாக அமைகின்றன. இதைத் தந்திர ஆகமங்கள் சுட்டிக்காட்டுகின்றன. தந்திர யோகம் உடம்பில் உள்ள நச்சுப் பொருள்களையும், மனதைப் பாதிக்கும் தீய கற்பனைகளையும் வெளியேற்றக் கற்றுத் தருகிறது. இவ்விதம் இந்த இரண்டையுமே வெளியேற்ற முடிந்தவன் உறுதியான உடலையும் தூய்மையான உள்ளத்தையும் பெறுகிறான். இந்த அடிப்படையைப்

பெறுபவன் மரணத்தையும் வெல்லலாம் என்று தந்திர யோகம் கூறுகிறது.

சித்தயோகம் நமது உடம்பில் இயங்கும் சூட்சும நாடிகளை உணரவைக்கிறது. இவற்றைச் சரியாக புரிந்துகொண்டு இயக்குவதன் மூலம் நாம் நம்முடைய ஐம்புலன்களையும் சீராகச் செயல்பட வைக்கலாம். பார்வை, கேட்கும் சக்தி, ருசி, தொட்டுணர்வு, சிந்தனை ஆகியவையும் ஜீரணம், ரத்த ஓட்டம், நரம்புகளின் உறுதி, இருதய பலம் ஆகியவற்றையும் அடைய முடியும். உடம்புக்குக் கெடுதல் செய்யும் நச்சுப் பொருள்களையும் வெளியேற்ற முடியும்.

மேலும் சித்தயோகம் மூச்சைக் கட்டுப்படுத்தி, நமது உள்ளம், உடல் இரண்டையுமே தூய்மைப்படுத்தும் வழியையும் காட்டுகிறது. உடல் முழுவதும் பரவியுள்ள நாடி அமைப்புகளை உறுதிப்படுத்தவும் கற்றுத் தருகிறது. இதனால் உடல் உபாதைகள், மனோ வியாதிகள் இரண்டையுமே மருந்துகள் இன்றி இயற்கையான வழியிலேயே நாம் சரி செய்துகொள்ள முடியும்.

ஒரு திறமை வாய்ந்த யோகி பிராணசக்தியை உள்ளுக்குள் இழுத்து, உடல் முழுவதும் பரவச் செய்ய முடியும். அதனால் நாடி நரம்புகளையும் உறுப்புகளையும் வலுப்படுத்த இயலும். உடல் உறுப்பும் உள்ளமும் வலிமை பெறுவதால் இளமையை நீடிக்கச் செய்து, முதுமையை வெல்ல முடியும். இதையே சித்தர்கள் காயகல்ப சிகிச்சை என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இந்து மதத்தின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட முக்கியமான வைத்திய முறைகளில் ஒன்று ஆயுர்வேதம் ஆகும். ஆயுர்வேத சிகிச்சை முறையின் முன்னோடிகளில் முக்கியமானவர்களில் ஒருவரான சரகர், நீடித்த ஆரோக்கியத்துக்கு அடிப்படையாக, ஒருவர் வாழ்க்கையில் எதையும் மிதமாகவே - அளவாகவே ஏற்று அனுபவிக்க வேண்டும் என்று கூறுகிறார். அன்றாட வாழ்க்கையில் அதிகமான அவசரம், சுகபோகங்களில் அதிகமான ஈடுபாடு, அளவுக்கு மீறிய துடிப்பான செயல்பாடு ஆகியவை இன்றைய வாழ்க்கைமுறையில் நமக்கு நேர்ந்துள்ள இடர்ப்பாடுகள். இவற்றை விலக்கி அமைதியாக வாழ்க்கையை ஏற்பதே, ஆரோக்கியத்துக்கு அடிப்படை என்பது இன்றைய மருத்துவ நிபுணர்களின் கருத்து. இதை அடிப்படையாகக் கொண்ட அணுகுமுறையே சரகருக்கு உரியதாகும்.

ஆயுர்வேத அடிப்படையில், மனோவியாதிகள் பலவும் மனிதனுக்குரிய ரஜஸ் (இயக்கம்) தமஸ் (சக்தி) ஆகிய இரண்டையும் சார்ந்தது என்ற கருத்து உள்ளது. அளவுக்கு மீறி இவை வாழ்க்கையில் இடம்பெற்றால் பேராசைக்கும், பெரும் வெறுப்புக்கும் இடம் ஏற்படுகிறது.



“

உலகத்தை இயக்கும் இரண்டு சக்திகள் நிலையானவையும், நகரக் கூடிய இயங்கும் பண்பும் கொண்டவையும் ஆகும். இவற்றையே இந்துமதம் சிவம் என்றும் சக்தி என்றும் கூறுகிறது.





இச்சைகள் வேகத்தையும், வெறுத்து ஒதுக்குவது துவேஷத்தையும் உண்டுபண்ணி வாழ்க்கையின் இனிமையைக் கெடுக்கின்றன. உள்ளச் சோர்வு, சலிப்பு, மன உறுதி குலைவு போன்றவை இவ்விதம் ஏற்படுபவைதான்.

இவ்வாறு ஏற்படும் மனக்கோளாறு உடல் நிலையையும் பாதிக்கிறது. இயற்கையை ஒட்டி நமது உடலில் அமைந்துள்ள சக்திகள் வாதம் - பித்தம் - கபம் ஆகியவற்றைச் சீராக வைத்துக்கொள்ள உதவுபவை. இவற்றைப் பாதிப்பதன் மூலம் நம் உடல் ஆரோக்கியமும் கெடுகிறது. இவற்றைச் சமச்சீராக கொண்டுவரும் முறையே, ஆயுர்வேத சிகிச்சையின் அடிப்படையாகும்.

இவை உடம்பின் இயல்பான பண்புகளான ரஜஸ், தமஸ், சத்வம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டவை. ரஜஸ் வாயுவையும், சத்வம் மற்றும் தமஸ் கபத்தையும், சத்வம் மற்றும் ரஜஸ் பித்தத்தையும் கட்டுப்படுத்துகிறது. இந்த மூன்று இயல்பான பண்புகளையும் சீராகச் சமநிலையில் வைத்துக்கொள்ளும்போது, மனிதனின் உடல் நிலையும் ஆரோக்கியமாக அமைந்துவிடுகிறது. இதுவே ஆயுர்வேதத்தின் அணுகுமுறை.

இவை மூன்றும் இயற்கையை ஒட்டி அமைந்தவை. மண், நீர், நெருப்பு, காற்று ஆகியவையே இவற்றின் அடிப்படை. ஆகவே இவை சுத்தமாக இருந்தால் நம்முடைய ஆரோக்கியமும் சீராக இருக்கும் என்பதே இதன் தத்துவம். சுற்றுப்புறச் சூழலின் தூய்மை முக்கியமானது என்று இன்று வலியுறுத்தப்படுகிறது. இந்த முக்கியமான தத்துவத்தை ஆயுர்வேதம் அடிப்படையாக அன்றே அமைத்துக் கொடுத்துள்ளது.

இயற்கையை ஒட்டி அமைந்த வாழ்க்கை, தூய்மையான காற்று, நீர் அவற்றினால் கிடைக்கும் இயற்கையின் பிரசாதங்களான தானியம், காய்கறி, பழங்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட உணவு முறை,



அந்தச் சூழ்நிலையில் செய்யும் தியானம் தரும் மனவலிமை ஆகியவையே மனிதனின் நீண்ட ஆயுளுக்கும் வழிவகுக்கும் என்பது அந்த முறை தரும் சித்தாந்தம் ஆகும்.

ஆகையால் உடல் உபாதைகளுக்கும், சிக்கல்களுக்கும், மனோ வியாதிக்கும் அடிப்படையான நரம்பு மண்டலச் சீர்குலைவுக்கும், ஆயுர்வேத முறை இயற்கையையே நாடுகிறது. இயற்கையை ஒட்டிய மூலிகைகளும் மருந்துகளும் சிகிச்சை முறைகளுமே இந்தக் குறைகளை நீக்கும் சாதனங்களாக அமைகின்றன. அதேபோல உணவு பத்திய முறைகளும், மிதமான - அளவான கட்டுப்பாடான உணவுப் பழக்கத்தை அடிப்படையாக வைத்தே விதிகளாக அமைகின்றன.



இந்து மதம் இந்த வைத்திய முறைகள் யாவற்றுக்கும் அடிப்படையை அமைத்து கொடுத்துள்ளது. உடம்பையும் உள்ளத்தையும் சீராக வைத்துக்கொள்வது மட்டும் இன்றி, வாழ்க்கையில் அமைதியை நிலவச் செய்து, வாழ்க்கையின் தரத்தை உயர்த்தும் நெறிமுறைகளுக்கும் அது அடிப்படை அமைத்துக் கொடுக்கிறது.

இந்து மதம் அமைத்துக் கொடுக்கும் இந்த சித்த, ஆயுர்வேத வைத்திய முறைகள், நமக்கு ஆரோக்கியத்தை அளிப்பது மட்டும் இன்றி, மகிழ்ச்சி நிறைந்த நிம்மதியான வாழ்க்கைக்கும் அடித்தளம் அமைக்கின்றன. வாழ்க்கையைச் சரியாகப் புரிந்துகொள்ளவும். அதற்கேற்றபடி அதன் தரத்தை உயர்த்திக் கொள்ளவும், நீண்ட ஆயுளை நிம்மதியாக அமைத்துக் கொள்ளவும், இந்து மதம் இயற்கையை ஒட்டி வாழ நமக்குக் கற்றுக் கொடுக்கிறது.

**டாக்டர் ஏ.கே.சின்ஹா அவர்கள் Vivekananda Kendra Patrika இதழில் எழுதிய கட்டுரையின் தமிழ் வடிவம்.**

காயத்ரி கிருஷ்ணராஜ் | படங்கள்: கே.எம்.பிரசன்னா

# பிரம்மஹத்தி தோஷம் நீங்கும் விளநகர்!



‘ஆயிரம் ஆனாலும் மாயூரம் ஆகாது’ என்பார்கள். மயிலாடுதுறையைச் சுற்றிலும் சிவபெருமான் ஐந்து திருத்தலங்களில் வள்ளலாக எழுந்தருளி உள்ளார். இதனால்தான் மயிலாடுதுறைக்கு இப்படி ஒரு தனிச் சிறப்பு. மயிலாடுதுறை மயூரநாதர் வள்ளல்பெருமானாக நடுநாயகமாக இருக்க, அவரைச் சுற்றிலும் நான்கு திருத்தலங்களில் சிவபெருமான் வள்ளல்களாகக் கோயில் கொண்டுள்ளனர். அவற்றுள் ஒரு திருத்தலமான திருவிளநகர் ஆலயத்தையே நாம் தரிசிக்க இருக்கிறோம்.

மயிலாடுதுறை - திருக்கடவூர் சாலையில் மயிலாடுதுறையிலிருந்து சுமார் 5 கி.மீ.தொலைவில் உள்ளது திருவிளநகர்.



**தலவரலாறு:**

முன்னொரு காலத்தில் இந்த ஊரில் அருள்வித்தன் என்ற பக்தன் வசித்து வந்தான். சதாசர்வ காலமும் சர்வேஸ்வரனையே சிந்தையில் இருத்தி தியானிக்கும் பக்தனான அவன், தினமும் அதிகாலையில் நந்தவனங்களுக்குச் சென்று வண்டு நுகராத மலர்களைச் சேகரித்து, விளநகர் சிவனாருக்கு அர்ச்சனை செய்வதற்காக அர்ப்பணிப்பதைத் தன்னுடைய நித்தியக் கடமையாகக் கொண்டிருந்தான். எத்தனை இடையூறு வந்தாலும், அவன் தன்னுடைய சிவத் திருப்பணியை நிறுத்தாமல் செய்து வந்தான்.

ஒருநாள், அருள்வித்தன் மலர்களைச் சேகரித்துக்கொண்டு காவிரி ஆற்றில் இறங்கி நடந்து வந்துகொண்டிருந்தபோது, அவனுடைய சிவபக்தியை உலகத்தவருக்கு உணர்த்திடத் திருவுள்ளம் கொண்ட சிவனார், ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கச் செய்தார். வெள்ளம் படிப்படியாக உயர்ந்து, அவன் முகத்தைத் தொட்டபடி ஓட, அப்போதும் அவன் தன் கையில் இருந்த மலர்க் குடலையைக் கையில் இருந்து நழுவவிட்டுவிடாமல் இறுகப் பிடித்துக் கொண்டு, சிவபூஜைக்கு நேரமாகிவிட்டதே என்ற தவிப்புடன், வினைகள் தீர்க்கும் விளநகர்நாதனைப் பிரார்த்தித்தான். இருபுறக் கரைகளில் இருந்த மக்கள் அவனுடைய நிலையைக் கண்டு தவித்துச் செய்வதறியாதிருந்த நிலையில், அருள்வித்தனின் சிவபக்தியை அனைவரும் உணரும்படியாகச் செய்யத் திருவுள்ளம் கொண்ட சிவனார், அவன் கரையேற வேண்டிய துறையின் வழியை அசரீரியாக உணர்த்தி அருள்புரிந்தார். அதன் காரணமாகவே இத்தலத்து இறைவனுக்குத் துறைகாட்டும் வள்ளல் என்ற திருப்பெயர் ஏற்பட்டது.

பிற்காலத்தில், ஞானசம்பந்தப் பெருமான் பல சிவாலயங்களைத் தரிசித்தபடி மயூரநாதர் கோயிலுக்குச் செல்லும்போது, காவிரி ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அதைக் கண்ட ஞானசம்பந்தப் பெருமான், ‘ஆற்றில் பெருக்கெடுக்கும் வெள்ளத்தைக் கடந்து கரையேற ஒரு துறையினைக் காட்டுவோர் எவரேனும் உள்ளாரோ?’ என்று மனதில் நினைத்த வேளையில், வேடன் ஒருவன் அவரைத் தாம் அழைத்துச் செல்வதாகக் கூறி

ஆற்றில் இறங்க, வெள்ளம் ஞானசம்பந்தப் பெருமானின் பாதத்தின் அளவாகக் குறைந்துவிட்டது. காவிரியின் தென்கரை சேர்ந்த சம்பந்தப் பெருமான், தனக்குத் துறை காட்டிய வேடனைத் திரும்பிப் பார்க்க, அங்கே வேடனைக் காணவில்லை. அந்த விளநகர் இறைவனே வேடனாக வந்து தமக்குத் துறை காட்டி அருளியவர் என்று தெளிந்த சம்பந்தப் பெருமான், விளநகர் சிவனாரைப் பதிகம் பாடி போற்றி வணங்கினார்.

ஆலயப் பிராகாரத்தில் பிரம்மாவுக்கு நேரெதிரில் ஆலயத்தின் தலவிருட்சமான தர்ப்பை இருப்பதைக் காண்கிறோம். தர்ப்பைக்கு விழல் என்று ஒரு பெயர் இருப்பதாகவும், முற்காலத்தில் இந்தத் தலத்தில் விழல் என்னும் தர்ப்பை நிறைந்திருந்ததால் விழல்நகர் என்று பெயர் பெற்று தற்போது விளநகர் என்று அழைக்கப்படுவதாகவும் சொல்லப்படுகிறது.

கருவறையில் 'ஒளிர் இளம்பிறை சென்னி மேல் உடையா'ராகிய ஈசன் துறை காட்டும் வள்ளல் என்ற திருப்பெயர் ஏற்று சிவலிங்கத் திருமேனியராகக் காட்சி தருகிறார். அம்பிகையின் சந்நிதியில் அன்னை வேயுறு தோளி அம்மை என்ற திருப்பெயர் கொண்டு நின்ற திருக்கோலத்தில் காட்சி அருள்வதை தரிசிக்கிறோம்.



தர்ப்பைக்கு விழல் என்று ஒரு பெயர் இருப்பதாகவும், முற்காலத்தில் இந்தத் தலத்தில் விழல் என்னும் தர்ப்பை நிறைந்திருந்ததால் விழல்நகர் என்று பெயர் பெற்று தற்போது விளநகர் என்று அழைக்கப்படுவதாகவும் சொல்லப்படுகிறது.

வெளிப் பிராகாரத்தில் நந்தி மண்டபத்துக்கு எதிரில் வன்னிமரத்தினடியில் காக வாகனத்துடன் கருநீல உடை உடுத்தி அலங்கார வடிவினராகக் காட்சி தருகிறார் சனீஸ்வர பகவான். இந்த ஆலயத்தில் நவகிரக சந்நிதியில் சனீஸ்வரர், சூரியனுக்கு அருகில் சனீஸ்வரர், வன்னிமர சனீஸ்வரர் என்று மூன்று சனீஸ்வரர்களை தரிசிக்கலாம். வன்னி மகாலட்சுமியின் அம்சம் என்பது ஐதிகம். வன்னி மரத்தினடியில் காட்சி தரும் சனீஸ்வரரை வலம் வந்து வழிபட்டால், சகல தோஷங்களும் விலகி அனைத்து செல்வங்களும் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

பிரதோஷ காலங்களில் இங்கு வந்து இறைவனுக்கு வில்வமாலை சாத்தி அர்ச்சனை செய்து வழிபட்டால், பலதரப்பட்ட துயரங்களில் சிக்கித் தவிப்பவர்களின் பிரச்னைகள் நீங்கி, அவர்களின் வாழ்க்கைக்கு நல்ல வழி காட்டுவார் என்பது ஐதிகம்.

தமிழும் சைவமும் இரு கண்களெனக் கொண்டு ஆன்மிகப் பணியும் அறப்பணிகளும் ஆற்றி வரும் தருமபுர ஆதீனத்தின் நிர்வாகத்தில் பூஜை வழிபாடுகள் சிறப்புடன் நடைபெற்று வரும் இந்த ஆலயம் அனைவரும் ஒருமுறையேனும் அவசியம் தரிசிக்கவேண்டும்.

திறந்திருக்கும் நேரம்: காலை 9 மணி முதல் 11 வரை




மாதங்களில் சிறந்த மாதம் மார்கழி. அதனால்தான் பகவான் கிருஷ்ணர், 'மாதங்களில் நான் மார்கழி' என்று கீதையில் சிறப்பித்துக் கூறியுள்ளார். தெய்வ வழிபாட்டுக் கென்றே அமைந்த மார்கழியில்தான் சிவனுக்கு உரிய ஆருத்ரா திருநாளும், விஷ்ணுவுக்கு உரிய வைகுண்ட ஏகாதசியும் வருகிறது. முன்னது திருவிழா என்றால், பின்னது விரதமிருந்து மனதையும் உடலையும் தூய்மைப் படுத்திக்கொண்டு பகவானின் திருவருள் பெற்றிட மேற்கொள்ளும் விரத நாளாகும்.

### ஏகாதசி திதி தோன்றிய வரலாறு:

கிருதயுகத்தில் முரன் என்ற அசுரன் இருந்தான். தேவர்கள் உட்பட அனைவரையும் துன்புறுத்தினான். தேவர்களின் பிரார்த்தனைக்கு இரங்கி, மகாவிஷ்ணு முரனை சம்ஹாரம் செய்யப்புறப்பட்டார். முரனின் படைக்கலன்களை எல்லாம் அழித்த பகவான், அவன் திருந்துவதற்கு ஒரு வாய்ப்பு கொடுக்கலாம் என்று திருவுள்ளம் கொண்டார். அதன்படி போரை விடுத்து பத்ரிகாசிரமத்தில் இருந்த ஒரு குகையில் போய் உறங்குவது போல் படுத்துக்கொண்டார். பகவானைத் தேடிக்கொண்டு அந்தக் குகைக்கு வந்த முரன், பகவான் உறங்குவதாக நினைத்துக் கொண்டு, அவரைக் கொல்ல வாளை ஓங்கினான்.

அப்போது மகாவிஷ்ணுவின் திருமேனியி லிருந்து அழகான பெண்ணொருத்தி தோன்றினாள். ஆயுதங்களுடன் காட்சி தந்த அந்தப் பெண், முரனை போருக்கு அழைத்தாள். பெண்ணென்று அலட்சியமாக நினைத்த முரன், 'பெண்ணே! உன்னைக் கொல்ல ஓர் அம்பே போதும்' என்று அம்பை எடுக்க முனைந்தபோது, அந்தப் பெண், 'ஹூம்' என்று ஓர் ஒலி எழுப்பினாள். அவ்வளவில் முரன் பிடி சாம்பலாகிப் போனான்.

அதே தருணத்தில் ஏதுமறியாதவர் போல் கண்விழித்தெழுந்த பகவான், தன் திருமேனியில் இருந்து வெளிப்பட்ட பெண் சக்திக்கு ஏகாதசி என்ற பெயரைச் சூட்டி, "ஏகாதசிப் பெண்ணே, நீ தோன்றிய இந்த நாளில் விரதமிருந்து என்னை வழிபடுபவர்களுக்கு அனைத்து செல்வங்களையும் தந்து முடிவில் வைகுண்ட பதவியையும் அருள்வேன்" என்று கூறினார்.

### வைகுண்ட ஏகாதசி வரலாறு:

முற்காலத்தில் பிரமாவுக்கு ஏற்பட்ட அகங்காரத்தை ஒடுக்க நினைத்த மகாவிஷ்ணு, தன் காதுகளிலிருந்து மது, கைடபர்கள் என்ற இரண்டு அசுரர்கள் வெளிப்படச் செய்தார். அவர்கள் பிரமாவைக் கொல்ல முயன்றபோது, அவர்களைத் தடுத்த மகாவிஷ்ணு, பிரமாவை

## மாதம்தோறும் வரும் ஏகாதசிகளும் விரத பலன்களும்:

● **சித்திரை:** சித்திரை மாத வளர்பிறை ஏகாதசிக்கு காமதா ஏகாதசி என்று பெயர். தம்பதிகளின் இடையே ஒற்றுமையை ஏற்படுத்தும்.தேய்பிறை ஏகாதசி பாபமோசநிகா ஏகாதசி எனப்படும். பாவங்கள் அனைத்தையும் போக்கும்,

● **வைகாசி:** வைகாசி மாத வளர்பிறை ஏகாதசி, மோகினி ஏகாதசி எனப்படும். சகல விதமான பாவங்களையும், அறியாமையையும் நீக்கும். வைகாசி மாத தேய்பிறை ஏகாதசி, வருதினி ஏகாதசி என்றழைக்கப்படுகிறது. வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து சௌபாக்கியங்களையும் கிடைக்கச் செய்யும்.

● **ஆனி:** ஆனி மாதம் வளர்பிறை ஏகாதசி நிர்ஜலா அதாவது நீர் கூடப் பருகாமல் இருத்தல் எனப்படும். அனைத்து ஏகாதசி தினங்களிலும் விரதம் இருந்த புண்ணியம் கிடைக்கும். ஆனி மாதம் தேய்பிறை ஏகாதசி அபரா எனப்படும். இது குருவை நிந்தனை செய்வதால் வரக்கூடிய பாவங்களைப் போக்கும்.

● **ஆடி:** ஆடி மாதம் வளர்பிறை ஏகாதசிக்கு சயனி என்று பெயர். தெய்விக சிந்தனையை அதிகமாக்கும். ஆடிமாதம் தேய்பிறை ஏகாதசியை யோகினி என்பர். நோய்கள் தீரும். யோக நிலையை அடையச் செய்யும்.

● **ஆவணி:** ஆவணி மாத வளர்பிறை ஏகாதசியான 'காமிகை'யிலும் தேய்பிறை ஏகாதசியான 'புத்திரதா'விலும் விரதமிருப்பவர்களுக்கு குழந்தை பாக்கியம் கிடைக்கும்.

● **புரட்டாசி:** புரட்டாசி மாதம் வளர்பிறை ஏகாதசி பத்மா எனப்படும். நீர் வளத்தினைப் பெருக்கி செழுமையைக் கொடுக்கும். உலக நன்மைக்காக மேற்கொள்ளப்படும் விரதம் இது. புரட்டாசி மாதம் தேய்பிறை ஏகாதசிக்கு அஜா என்று பெயர். இழந்ததை மீட்டுத் தரும் வல்லமை பெற்றது.

● **ஐப்பசி:** ஐப்பசி மாதம் வளர்பிறை ஏகாதசி பாபாங்குசா எனப்படும். பாவங்களைப் போக்கி கங்கையில் நீராடிய பலனைக் கொடுக்கும். ஐப்பசி மாதம் தேய்பிறை ஏகாதசி இந்திரா எனப்படும். நமது மூதாதையர்களுக்கு மோட்சம் அளிக்கும் நாள்.

● **கார்த்திகை:** கார்த்திகை மாதம் வளர்பிறை ஏகாதசி ப்ரபோதினி என்று கூறப்படுகிறது. வாழும் காலத்திலேயே மகிழ்ச்சியான வாழ்வைத் தரக்கூடியது. கார்த்திகை மாத தேய்பிறை ஏகாதசி ரமா எனப்படும். உயர்ந்த பதவிகளை அளிக்கக்கூடியது.

● **மார்கழி:** மார்கழி மாத ஏகாதசி வைகுண்ட ஏகாதசி. மோட்ச ப்ராப்தம் கிடைப்பதால், இந்த ஏகாதசி, எல்லா ஏகாதசிகளையும் விட மிக முக்கியமாகக் கருதப்பட்டு வைகுண்ட ஏகாதசி என்று போற்றப்படுகிறது. மார்கழி மாத தேய்பிறை ஏகாதசி உற்பத்தி ஏகாதசி எனப்படுகிறது. இது சகல சௌபாக்கியங்களை கொடுக்கும். பகையை வெல்ல உதவும்.

● **தை:** தை மாதம், வளர்பிறை ஏகாதசிக்கு புத்ரதா என்று பெயர். பல வருடங்கள் புத்திரப்பேறு இன்றி வருந்திய சுகேதுமான் - சம்பா என்ற அரச தம்பதியர்க்கு குழந்தை அருளிய பெருமையுடையது என்று சொல்லப்படுகிறது. தை தேய்பிறை ஏகாதசிக்கு சபலா என்று பெயர். ஒளிமயமான வாழ்க்கை கிடைக்கும்.

● **மாசி:** மாசி மாதம் வளர்பிறை ஏகாதசிக்கு ஜயா. தொடங்கும் காரியங்கள் அனைத்திலும் வெற்றியைத் தரக்கூடியது. மாசி மாதம் தேய்பிறை ஏகாதசிக்கு ஷட்திலா என்று பெயர். ஷட் என்றால் ஆறு; திலா என்றால் எள். உடனடியாக பலனளிக்கும் மிகவும் சக்தி வாய்ந்த விரதம்.

● **பங்குனி:** பங்குனி மாதம் வளர்பிறை ஏகாதசிக்கு ஆமலகி எனப் பெயர். எல்லா தெய்வங்களும் கோமாதாவுள் அடக்கம் என்பதால், கோபூஜை செய்ய ஏற்றது. பங்குனி மாதம் தேய்பிறை ஏகாதசிக்கு விஜயா என்று பெயர். ராமர் இவ்விரதத்தினை மேற்கொண்டே சீதையை மீட்டார். எனவே இது பிரிந்தவர்களைச் சேர்த்து வைக்கும் ஆற்றல் கொண்டது.

விட்டு விடும்படியும், அவர்கள் கேட்கும் வரத்தைத் தருவதாகவும் கூறினார். அந்த அசுரர்கள் மகாவிஷ்ணுவிற்கு வேண்டுமானால் தாங்கள் வரம் தருவதாகக் கூறினர்.

மகாவிஷ்ணுவும் தன்னால் அவர்கள் வதம் செய்யப்பட வேண்டும் என்ற வரத்தைக் கேட்டார். அசுரர்களானாலும் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற நினைத்த அசுரர்கள், தங்களை சமாளித்துக்கொண்டு, "பகவானே, ஒரு விண்ணப்பம். தாங்கள் ஒரு மாதம் எங்களுடன் யுத்தம் செய்யவேண்டும். அதன் பிறகே நாங்கள் ஸித்தி அடையவேண்டும்" என்று வேண்டினார்கள். பகவானும் அப்படியே வரம் தந்தார். யுத்தத்தின் முடிவில் பகவான் அவர்களை வீழ்த்தினார். பகவானின் மகிமைகளை உணர்ந்த அசுரர்கள், பகவானின் பரமபதத்தில் தாங்கள் நித்தியவாசம் செய்ய வேண்டும் என்ற வரத்தினைக் கேட்டனர். மார்கழி மாத வளர்பிறை ஏகாதசியன்று பரமபதத்தின் வடக்கு வாசலைத் (சொர்க்க வாசல்) திறந்து, அதன் வழியாக அசுரர்களை பரமபதத்தில் சேர்த்துக்கொண்டார். அப்போது அவர்கள் கேட்டுக்கொண்டபடி அந்த நாள் ஒரு விழாவாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. அன்றைய தினம் சொர்க்கவாசல் வழியாக எழுந்தருளும் பகவானை தரிசிப்பவர்களுக்கு அனைத்து செல்வங்களும் கிடைக்கும் என்பது ஐதிகம்.

திதிகளில் பதினோராவது திதியாக வருவது ஏகாதசி. அன்றைய தினம் புலன்கள் அனைத்தையும் கட்டுப்படுத்தி விரதமிருந்து எண்ணம் முழுவதையும் இறைச் சிந்தனையில் செலுத்தி வழிபட்டால் வாழ்க்கையில் அனைத்து வளங்களும் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

**-நமது ஆன்மிக நிருபர்**

Registered with Registrar of Newspapers for India
No. 42582/83 Licensed to post without Pre-payment
under Regn.No. TN/WR/CBE/016/WPP/2021-23
Regd. No. : CB/016/2021-23
Date of Publication : 28th Every Month

OM SAKTHI - JANUARY - 2022